கம்பராமாயணம்

# கங்கைப்படலம்
# குகப்படலம்

(மூலமும் தெளிவுரையும்)



ஒரு சமூக வரலாற்றுப் பார்வை

முனைவர். ந.பிச்சமுத்து

கம்பராமாயணம்

# கங்கைப்படலம்
# குகப்படலம்

(மூலமும் தெளிவுரையும்)



ஒரு சமூக வரலாற்றுப் பார்வை

முனைவர் ந.பிச்சமுத்து

## நூலின் விவரங்கள்


தலைப்பு : கம்பராமாயணம்
கங்கைப்படலம் - குகப்படலம்
மூலமும் தெளிவுரையும்
ஒரு சமூக வரலாற்றுப் பார்வை

ஆசிரியர் : பேராசிரியர் முனைவர் ந. பிச்சமுத்து

உரிமை : ஆசிரியருக்கே

மொழி : தமிழ்

பொருள் : திறனாய்வு

பதிப்பு : முதற் பதிப்பு

ஆண்டு : ஆகஸ்ட் 1997

நூல் அளவு : 21 x 14 செ.மீ

எழுத்தளவு : 12 புள்ளி அளவு

தாள் வகை : 13.7

பக்கங்கள் : 123

படிகள் : 1000

விலை : ரூபாய் 40

வெளியிடுவோர் : சக்தி வெளியீடு

விற்பனை உரிமை : சக்தி புத்தக நிலையம்
5, பாரதி சாலை
திருவல்லிக்கேணி
சென்னை - 600 005.

ஒளியச்சு : கிரீன் சாப்ட் சிஸ்டம்ஸ்
89-H/1, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.
போன்: 857 2994

---

அச்சிட்டோர்
சேகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், 168, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் சிலப்பதிகாரம், சிந்தாமணிக்கு அடுத்துக் கம்பராமாயணத்துக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. கம்பராமாயணம் ஒரு கவிதைக் கடல், கற்பனைக் கருவூலம், வழி நூல்களுக்கு வழிகாட்டி. கம்பனின் கவிதைகளைப் படிப்பதே பெரிய பேறு. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி.ஏ. ஆனர்ஸ் வகுப்பில் சுந்தர காண்டத்தைச் சுவைத்துப் படித்தேன். தொடர்ந்து 1956 முதல் 1987 வரை முப்பது ஆண்டுகளுக்கு மேல் கல்லூரிகளில் தமிழ்ப் பட்டவகுப்பு, முதுகலைப் பட்டவகுப்பு மாணவர்களுக்கும், புலவர், பி.லிட்., மாணவர்களுக்குத் தனியாகவும் பாடம் சொல்வதற்குக் கிடைத்த வாய்ப்பு பெரிய அனுபவமாக அமைந்தது. அந்த அனுபவத்தினால் பெற்ற ஆர்வம் மேலும் கம்பராமாயணத்தைப் படிக்கத் தூண்டியது. இலக்கியம் எதுவாக இருந்தாலும் படிக்கப் படிக்க ஆர்வம் அதிகரிப்பது ஒரு சுவையான, சுகமான அனுபவம்.

கம்பன் பாலகாண்டத்தில் சமூகப் பொருளாதாரம் பற்றிக் கூறும் சில கருத்துக்கள் அவன் குகப்படலத்தில் கூறும் கருத்துக்களால் வலிமை பெறுகின்றன. நெஞ்சத்தில் நிழலாடிக் கொண்டிருக்கும் கருத்துக்களை இலக்கிய ஆர்வம் மிகுந்த என் நண்பர்களிடம், பேசுவது வாடிக்கை. சிறப்பாக மதுரைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவராக இருந்து அண்மையில் ஓய்வு பெற்ற என் நண்பர் பேராசிரியர், முனைவர் T.முருகரத்தினம் அவர்களைச் சந்திக்கும் போதெல்லாம் பேசுவது இலக்கியவிமர்சனந்தான். அவருடைய தூண்டுதலாலும் என் அருமைத் தோழர் பேராசிரியர் கவிஞர் இன்குலாப் அவர்களுடன் அண்மையில் பேசிக் கொண்டிருந்த போது அரசு பற்றிக் கம்பனின் கருத்துக் குறித்துப் பேச்சு வந்த போது கம்பராமாயணத்தைப் பற்றி நாம் கொண்டிருக்கும் கருத்தைச் சற்று ஒதுக்கி வைத்துவிட்டு, புதிய கோணத்தில் பார்த்தாக வேண்டும் என்று கூறினார்கள். நம் பெருமதிப்புக்குரிய, காலஞ்சென்ற தோழர் ப.ஜீவானந்தம் அவர்கள் கம்பனின் பொருளாதாரச் சிந்தனை பற்றிச் சில நல்ல

கருத்துக்களைக் கூறி ஒரு ஆய்வினைத் தொடங்கி-வைத்திருக்கிறார். அவரை அடியொற்றி கம்பராமாயணம் முழுவதையும் சமூக வரலாற்றுப் பார்வையில் ஆராய வேண்டும் என்பது என் ஆசை. அந்த ஆசையின் சிறிய கூறு வரிவடிவமெடுப்பதே கங்கைப் படலம் - குகப்படலம் ஒரு சமூக வரலாற்றுப் பார்வை என்னும் இந்த நூல்.

ஒரு உடனடித் தேவையின் அடிப்படையில் இந்த நூல் வெளிவருகிறது. என்னுடைய, வரலாற்றுப் பார்வையில் அமைந்த, சிலப்பதிகாரம் "வஞ்சிக்காண்டம்", "குகப்படலம்", "பாஞ்சாலி சபதம்", "திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்" போன்ற ஆய்வு நூல்களைப் படித்துப் பயனடைந்த, மத்திய தேர்வாணையமும் (U.P.S.C.) தமிழ் நாடு தேர்வாணையமும் நடத்தும் போட்டித் தேர்வுகள் எழுதுவோர் வேண்டுகோளையும் முன்னிட்டு இந்த நூல் வெளி வருகிறது.

*தலைப்புகள் பற்றிய ஒரு சிக்கல்:*

கம்பராமாயணத்தில் பால காண்டத்தை அடுத்தது ஆரண்யகாண்டம். அதில் இடம் பெறுவது குகப்படலம். "குகப் படலம்" எது என்பது ஒரு குழப்பகாக இருக்கிறது. வை.மு.கோபால கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பில் காணப்படும் "குகப்படலம்" உ.வே.சா நூல் நிலையப் பதிப்பில் "கங்கை காண்படலம்" என்று காணப்படுகிறது. வை.மு.கோ பதிப்பில் "கங்கைப் படலம்" என்னும் தலைப்பில் காணப்படும் பாடல்கள் உ.வே.சா. நூல் நிலையப் பதிப்பில் 'கங்கைப் படலம்', 'குகப்படலம்' என்று இரு தலைப்புக்களின் கீழ் இடம் பெறுகின்றன.

இவர்கள் பகுப்பு முறை ஒரு புறம் நிற்க. குகனைப் பற்றி அறிய விரும்புவோர் எந்தப் பகுதியைப் படிப்பது? இந்த வினா உ.வே.சா நூல் நிலையப் பதிப்பாளர்களுக்கு எழுந்திருக்கிறது. இராமன் அயோத்திமா நகரை விட்டு நீங்கி கங்கைக் கரையை அடைகிறான். அங்கு அறிமுகப்படுத்தப்படும் பாத்திரம் குகன். இராமனின் பெருமைகளை விளக்குவதில் குகனும் ஒரு பாத்திரம்.

திருமாலின் அவதாரமான இராமன், ஏழை, கீழ்ச்சாதிக் காரன் என்று வேறுபாடு கருதாமல் குகனைத் தோழன் என்றும் இலக்குவனை அவனுக்குத் தம்பியென்றும் சீதையைக் கொழுந்தி என்றும் சொல்லுமளவுக்குப் பெருந்தன்மை வாய்ந்தவன் என்று புகழ்ந்து பாடுகின்றனர் ஆழ்வார்கள்.

"கூரணிந்த வேல் வலவன் குகனொடும் கங்கை தன்னில்
சீரணிந்த தோழமை கொண்டதும்"

இப்பகுதியின் சிறப்புச் செய்தியாகலின் கங்கைப் படலம் என்பதைக் குகப்படலம் என்று கூறுவதே பொருந்துவதாகும் என்று கூறுகிறது உ.வே.சா. நூல் நிலையப் பதிப்பு.

வை.மு.கோ. பதிப்பில் "கங்கைப்படலம்" என்று பெயரிடுவதைக் "குகப்படலம்" என்றும் குகப்படலம் என்னும் தலைப்பைப் "பரதன் கங்கை காண் படலம்" என்றும் மாற்றிப் பெயரிடுவதால் இந்தச் சிக்கலைத் தீர்க்க முடியும். கம்பராமாயணத்தில் ஆழ்ந்த புலமை வாய்ந்த பெரியவர்களும் காரைக்குடி, கம்பன் கழகத்தாரும் இது பற்றிச் சிந்தித்து முடிவெடுப்பது சாலச் சிறந்தது.

படிப்பவர்களின் பயன்கருதி வை.மு.கோ. வைப்பு முறையைப் பின்பற்றிக் "கங்கைப்படலத்தில்" 63 பாடல்களும் குகப்படலத்தில் 73 பாடல்களும் ஆக 136 பாடல்களுக்குப் பொழிப்புறை தரப்பட்டுள்ளது.

இந்த நூலில் உ.வே.சா. நூல் நிலையப் பதிப்புரையும் வை.மு.கோ. பதிப்புரையும் ஓரளவுக்குப் பின்பற்றப்பட்டுள்ளது. சில பாடல்களுக்குப் பொருத்தமான புதிய உரைகள் தரப்பட்டுள்ளன. பொழிப்புரையை அடுத்துச் சில பாடல்களுக்குக் கருத்துரையும் இலக்கணக் குறிப்புக்களும் தரப்பட்டுள்ளன.

பாத்திரங்களின் பண்பு நலன்கள் குகன், இராமன், பரதன், இலக்குவன் ஆகியோரின் ஆளுமை தனித்தனியே

விளக்கப்பட்டுள்ளது. கம்பனின் சமூகப் பார்வை தமிழக வரலாற்றுப் பின்னணியில் விளக்க முயற்சி செய்துள்ளேன்.

கம்பராமாயணம் பற்றிப் பேசுவோர் கம்பனின் கவிதை நயத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. நயம்பாராட்டுவதில் சொல்நயம், பொருள்நயம், அணிநயம், சமூகப் பிரதிபலிப்பு போன்ற செய்திகளை விளக்குவதற்கு இடஞ்சுட்டிக் காண்பது தவிர்க்க முடியாத ஒன்று. இந்த முறையில் பாடல்கள் தனித்தனியாக விளக்கப்படும் நிலையில் கூறியது கூறல் தவிர்க்க முடியாததாகிறது. படிப்பது இனிமையானது; எளிமையானது. படித்ததை உணர்வது சற்றுக் கடினமானது. உணர்ந்ததை உணர்ந்தவாறு சொல்லுவது மிகவும் கடினமானது. இச்செயல்களைப் பலர் செய்து விடமுடியும்; ஆனால் உணர்ந்த வற்றுக்கு வரிவடிவம் தருவது மிகமிகக் கடினமானது மிகப்பலரால் இயலாதது. நான் இந்த முயற்சியில் சிறிது ஈடுபட்டுள்ளேன்.

என்னுடைய ஏணைய படைப்புக்களுக்குக் கிடைத்ததைப் போலவே இதற்கும் வரவேற்பிருக்கும் என்று நம்புகிறேன்.

சென்னை
8.8.97

ந. பிச்சமுத்து

# பதிப்புரை

"நவில் தொறும் நூல் நயம் போலும்" என்னும் வள்ளுவர் வாக்குக்கு ஏற்ப பயிலும் போதெல்லாம் புதிய புதிய பொருள்தரும் இலக்கியங்கள் தமிழில் ஏராளம். புதிய புதிய நூல்களும் வெளிவந்த வண்ணமுள்ளன. அவற்றுள் சோதிடம், தோத்திரம், மந்திர தந்திரம் சமையற்கலை பற்றிய நூல்கள் 75% எஞ்சிய பகுதியில் திறனாய்வு நூல்கள் சிலவே அவற்றுள்ளும் சமூக வரலாற்றுப் பார்வையில் அமையும் நூல்கள் விரல்விட்டு எண்ணத்தக்கவை தான்.

அந்த வகையில் பேராசிரியர் ந. பிச்சமுத்து அவர் களின் சமூக வரலாற்றுப் பார்வையில் அமைந்த படைப்புக்களான திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், பாஞ்சாலிசபதம் தடுத்தாட் கொண்ட புராணம், சிலப்பதி காரம் வஞ்சிக்காண்டம் ஆகிய 'பலராலும் பாராட்டப்படும்' நூல்களை வெளியிட்டதில் மன நிறைவு ஏற்படுகிறது.

இப்போது கம்பராமாயணம் கங்கைப்படலம் - குகப்படலம் ஒரு சமூக வரலாற்றுப்பார்வை என்னும் இப்புதிய நூலை வெளியிடுவதில் மெத்த மகிழ்ச்சியடைகிறோம்.

எங்கள் வெளியீடுகள் விஞ்ஞான பூர்வமான திறனாய்வாக அமைந்திருப்பதால் ஆராய்ச்சியாளர்களுக்கும்

**IAS - TNPSC**

போன்ற உயர்நிலைப் போட்டித்தேர்வுகளுக்கும் பெரிதும் பயன்படுவனவாகும்.

## உள்ளடக்கம்

# கங்கைப்படலம்

## கதைச்சுருக்கம்

தாதை எவலின் காடுசெல்லத் துணிந்த இராமன் சீதை, இலக்குவன் பின் தொடர அயோத்தியை விட்டு நீங்குகிறான். கோசல நாட்டு எல்லையில் உள்ள மருத நிலக் காட்சிகளைக் கண்டவாறு கங்கையாற்றின் வடகரையை அடைகிறான். அங்கு முனிவர்களோடு தங்குகிறான். அக்கரையிலுள்ள குகன் இராமனின் வருகை அறிந்து அவனைக்காணக் காணிக்கைப் பொருள்களுடன் செல்கிறான். இராமனைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்து, அவனுக்காக எந்தத் தியாகமும் செய்யத் துணிகிறான். குகனின் அளவிறந்த அன்பை உணர்ந்த இராமன் அவனைத் தன் உடன் பிறந்தவனாக அறிவிக்கிறான். இராமனின் தீராக் காதலன், யாரினும் இனிய, நண்பன், நல்லவன். குகனுடைய உதவியால் கங்கையைக் கடக்கிறான் இராமன். அங்குக்குகனிடம் பிரியாவிடைபெற்றுச் செல்கிறான்.

1. **வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்**
   **பொய்யோவெனு மிடையாளொடுமிளையானொடும் போனான்**
   **மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ**
   **ஐயோவிவன் வடிவென்பதோ ரழியாவழ குடையான்.**

அவனுடைய உடம்பிலிருந்து வெளிப்படும் அழகொளியில் சூரியனுடைய ஒளியும் மங்கி மறையுமாறு மையோ, மரகதமோ மடிந்து விழும் அலைகளை உடைய கருங்கடலோ? நீர் நிறைந்த கருமேகமோ? (என்னவென்று சொல்லுவது என வியந்து) ஐயோ! இவன் வடிவமென்பது ஒரு அழியாத அழகுடையது என்று வியக்கும் படியான இராமன், உண்டோ இல்லையோ என்று எண்ணும் படியான இடையை உடைய சீதையோடு சென்றான்.

பேரழகு படைத்த இராமன் அழகிய சீதையுடன் சென்றான். இதில் அடங்கியுள்ள அணி ஐயவுவமை எனப்படும்.

2. **அளியன்னதொ ரறறுன்னிய**
   **குழலாள் கட லமுதின்**
   **தெளியன்னதொர் மொழியாணிறை**
   **தவமன்னதொர் செயலாள்**

வெளியன்னதொ ரிடையாளொடும்
விடையன்ன தொர் நடையான்
களியன்னமு மடவன்னமு
முடனாடுவ கண்டான்.

வண்டுகளை ஒத்த கருமணல் போன்ற, நெருங்கியிருக்கும் (கரிய) கூந்தலை உடையவள், அமுது போன்று இனிமையாகப் பேசுகிறவள். நிறைந்த தவத்தைப் போன்று செயல்படுகிறவள், ஆகாயத்தைப் போன்று, இல்லையோ உள்ளதோ என்று ஐயப்படும் படியான இடையை உடைய சீதையோடு ஏறுபோல் பீடுநடை உடைய இராமன், ஆண் அன்னமும் பெண் அன்னமும் ஆடி மகிழ்வதைக், கண்டான்.

3. அஞ்சம்பையு மையன்றன தலகம்பையுமளவா
நஞ்சங்களை வெலலாகிய நயனங்களை யுடையாள்
துஞ்சுங்கனி வரிவண்டுகள் குழலின்படி சுழலும்
கஞ்சங்களை மஞ்சன்கழ லகுகின்றது கண்டாள்.

மன்மதனது ஐந்து மலரம்புகளையும், இராமனுடைய கூர்மையான அம்பையும் அளந்த, விடத்தை வெல்லும் விழிகளை உடைய சீதை, மதக்களிப்புடைய வரி வண்டுகள் குழலிசை போல் ஒலி செய்து கொண்டு வட்டமிடும் தாமரை மலர்களைப் பரிகசிப்பது போன்ற இராமனுடைய பாதங்களைக் கண்டாள்.

இராமனுடைய பாதங்கள் வண்டுகள் மொய்க்கும் தாமரை இதழ்களை விட அழகோடு விளங்குவதைக் கண்டாள் சீதை.

4. மாகந்தமு மகரந்தமு மளகந்தர மதியின்
பாகந்தரு நுதலாளொடு பவளந்தரு மிதழான்
மேகந்தனி வருகின்றது மின்னோடென மிளிர்பூண்
நாகந்தனி வருகின்றது பிடியோடென நடவா.

மிகுந்த மணத்தையும் மகரந்தப் பொடிகளையும் தாங்கிய கூந்தல் அமைந்தநிலையில் பிறைமதி போன்ற நெற்றியை உடைய சீதையோடு, பவளம் போன்ற இதழ்களை உடைய இராமன் கருமேகம் மின்னலொடு கூடிவருகின்றது என்று சொல்லும் படியாகவும் அணிகலன்களை அணிந்த ஆண் யானை பிடியொடு, பெருமிதமாக நடந்தது போலவும் நடந்தான்.

5. தொளைகட்டிய கிளைமுட்டிய கருதிச்சுவை யமுதின்
கிளைகட்டிய கருவிக்கிள யிசையிற்பசை நறவின்
விளைகட்டியின் மதுரித்தெழு கிளவிக்கிளி
விழிபோல்
களைகட்டவர் தளைவிட்டெறி குவளைத் தொகை
கண்டான்.

தொளை பொருந்திய குழலிலிருந்து காற்று மோதி எழுப்பிய இனிய அமுதம் போன்றதும், நரம்புகள் கட்டப் பெற்ற இசைக்கருவியாகிய யாழினின்று எழும் இசையைப் போன்றதும் பசுந்தேனையும் கருப்பஞ்சாற்றுக் கட்டியையும் போன்ற இனிய பேச்சையுமுடைய கிளி போன்றவளான சீதையின் கண்களைப் போன்ற, களையெடுப்பவர் விடுங்கியெறிகின்ற, குவளை மலர்களைக் கண்டான்.

6. அருப்பேந்திய கலசத்துணை யமுதேந்திய மதமா
மருப்பேந்திய வெனலாமுலை மழையேந்திய
குழலாள்
கருப்பேந்திர முதலாயின கண்டாளிடர் காணாள்
பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள்
போனாள்.

தாமரை முகையை ஒத்திருக்கம் அழகிய கலசங்களில் (கொங்கைகளில்) இனிமை நிறைந்த மதயானையின் தந்தங்களைப் போன்று எடுப்பாக இருக்கும் கொங்கைகளையும், கருமுகில் போன்ற கூந்தலையும் உடைய சீதை, கரும்பாலை முதலான பல காட்சிகளைக் கண்டு கொண்டு, மலைபோன்ற திரண்ட தோள்களை உடைய இராமனோடு விளையாடியவாறு நடந்ததால் உண்டாகும் வருத்தத்தை உணராமல் நடந்தாள்.

(இச்செய்யுளில் சீதையின் கொங்கைகள், தாமரை மொக்கு போன்றவையென்றும், கோபுரக் கலசங்கள் போன்றவையென்றும், யானைத்தந்தம் போன்றவையென்றும் ஒரு பொருளுக்குப் பல பொருள்களை உவமை கூறுவது பல்பொருள் உவமை எனலாம்.)

மேலும் ஏந்திய என்ற சொல் பலவிடங்களில் பயின்றுவது சொற்பொருள் பின்வருநிலையணியாம்.

7. பன்னந்துக டரளத்தொகு படர்பந்திகள் படுநீர்
அன்னந்துயில் வதிதண்டலை யயனந்துறை புளினம்
சின்னந்தரு மலர்தந்தன சேறிநந்தன வனநன்
பொன்னந்திய நதிகண்டுள மகிழ்தந்தனர் போனார்.

பல சங்குகளிலிருந்து தோன்றிய முத்துக்கள் குவிந்துள்ள, பங்கயம் படர்ந்துள்ள நீர் நிலைகளையும், அன்னப் பறவைகள் துயிலும் சோலைகளையும், அயலே சங்குகள் உறையும் மணல் மேடுகளையும் அழகுதரும் மலர் சிந்தும் பூஞ்செடிகள் நிறைந்த நந்தவனங்களையும், நல்ல பொன்னைக் கொழிக்கும் ஆறுகளையும் கண்டவாறு மனமகிழ்ந்தவர்களாய்ச் சென்றார்கள்.

8. கால்பாய்வன முதுமேதிகள் கதிர்மேய்வன
கடைவாய்ப்
பால்பாய்வன புனல்பாய்வன மலர்வாயளி படரச்
சேல்பாய்வன கயல்பாய்வன செங்கான்மட வன்னம்
போல்பாய்புனல் மடவார்படி நெடுநாடவை
போனார்.

பெரிய எருமைகள் நெற்கதிர்களை மேய்கின்ற அவற்றின் வாயிலிருந்து (முதிராத நெற்கதிரின்) பால் வழிகின்றது. தேன் சொட்டும் மலர்களில் வண்டுகள் மொய்க்கின்றன. சேல் மீன்களும் கயல் மீன்களும் குதித்துத் துள்ளுகின்றன. சிவந்த கால்களை உடைய மடப்பம் நிறைந்த அன்னம் போன்ற அழகிய பெண்கள் குளிப்பதற்கு இடமான பல துறைகளை உடைய நீர்பாயும் சிறந்த (கோசல) நாட்டைக் கடந்து சென்றார்கள். இங்குத் திருத்தக்க தேவா பாடும் "பாளைவாய்க் கமுகின் நெற்றிப் —" என்னும் பாடற் பொருள் ஒப்பு நோக்கத் தக்கது.

## இராமன் முதலியோர் கங்கையை அடைதல்

9. பருதி பற்றிய பல்கலன் முற்றினர்
மருத வைப்பின் வளங்கெழு நாடொரீஇச்
சுருதி சுற்றுயர் தோமிலர் சுற்றும்
விரிதி ரைப்புனற் கங்கையை மேவினார்

இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் சூரியனைப் போல் விளங்குகின்ற பல அணிகலன்களை அணிந்து மருதநிலம்

நிறைந்த கோசல நாட்டைக் கடந்து, வேதங்களைக்கற்று உயர்வடைந்த குற்றமற்ற முனிவர்கள் வாழும் பரந்த அலை வீசும், கங்கை ஆற்றை அடைந்தனர்.

10. கங்கை யென்னுங் கடவுட் டிருநதி
தங்கி வைகுந் தபோதனர் யாவரும்
எங்கள் செல்கதி வந்தென் றேமுற
அங்க ணாயகற் காணவந் தண்மினார்

கங்கையென்னும் கடவுள் தன்மை வாய்ந்த அழகிய ஆற்றங்கரையில் தங்கி வாழும் இருடிகள் யாவரும் "நாங்கள் அடையும் இடம் (பரம்பொருள்) இங்கே வந்தது" என்று மகிழ்ந்து அழகிய கண்களை உடைய இராமனைக் காண வந்து கூடினர்.

11. பெண்ணி னோக்குஞ் சுவையிற் பிறர்பிறர்க்
கெண்ணி னோக்கி யியம்பரு மின்பத்தைப்
பண்ணி னோக்கும் பராவமு தைப்பசுங்
கண்ணி னோக்கின ருள்ளங் களிக்கின்றார்.

இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டவர்கள் பெண்களிடம் அனுபவித்துப் பெறும் காம இன்பத்தைப் போல், மனத்தால் நினைத்து மதிப்பிட்டுச் சொல்லுதற்கருமையான இன்ப வடிவமான இனிய நோக்கினை உடைய இராமனைக் கண்குளிரக் கண்டு களித்தனர் முனிவர்கள்.

இனிய பார்வையை உடைய சீதைக்கு ஏற்பட்ட நிலையை எண்ணி வருந்தி நோக்கினர் என்றும் பொருள் கொள்ளலாம்.

12. எதிர்கொ டேத்தின ரின்னிசை பாடினர்
வெதிர்கொள் கோலின ராடினர் வீரனைக்
கதிர்கொ டாமரைக் கண்ணனைக் கண்ணினால்
மதுர வாரி யமுதென மாந்துவார்.

இராமனை எதிர்கொண்டு பாராட்டி இன்னிசை பாடினார்கள். மூங்கிலினால் செய்யப்பட்ட தண்டத்தை ஏந்திய முனிவர்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள். வீரனான ஒளி வீசும் தாமரை மலர் போன்ற கண்ணனை, இனிமையானதும் பாற்கடலில் தோன்றியதுமான அமுதத்தை உண்பதைப்போல் கண்களால் பருகினர்.

13. மனையி னீங்கிய மக்களை வைகலும்
நினையு நெஞ்சினர் கண்டிலர் நேடுவார்
அனையர் வந்துற வாண்டெதிர்ந் தார்கள்போல்
இனிய மாதவப் பள்ளிகொண் டெய்தினார்

தங்களை விட்டுப் பிரிந்த மக்களை நாள்தோறும் நினைக்கும் நெஞ்சோடு, அவர்களைக் காணப் பெறாமல் தேடியவர்கள். அந்தப் பிள்ளைகள் திரும்பி வந்து சேரும்போது எதிர்ப்பட்டு வரவேற்று மகிழும் பெற்றோர்களைப்போல் முனிவர்கள் இராமனைத் தங்கள் தவப் பள்ளிகளுக்குஅழைத்துச் சென்றனர்.

## முனிவர்கள் இராமனின் வருத்தம் தணித்தல்

14. பொழியுங் கண்ணீர்ப் புதுப்புன லாட்டினர்
மொழியு மின்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்
அழிவி லன்பெனு மாரமிர் தூட்டினர்
வழியின் வந்த வருத்தத்தை வீட்டினர்

இராமன் வழிநடந்து வந்த வருத்தம் தணியுமாறு, முனிவர்கள் கண்களினின்று வழியும் மகிழ்ச்சிக் கண்ணீரான புதுப்புனலால் நனைத்து, கூறும் இனிய சொல் மாலை சூட்டினர். அழிவில்லாத அன்பெனும் ஆரமுதூட்டினர்.

15. காயுங் கானிற் கிழங்குங் கனிகளும்
தூய தேடிக் கொணர்ந்தனர் தோன்றனி
ஆய கங்கை யரும்புன லாடினை
தீயு மோம்பினை செய்யமு தென்றனர்

காட்டிற் கிடைக்கும் நல்ல காய், கிழங்கு, கனியாகியவற்றைக் கொணர்ந்து, "சிறந்தவனே கங்கையில் நீராடி நாள்தோறும் செய்யும் வேள்விச் சடங்கை முடித்து அமுதுண்பாயாக என்றனர்.

16. மங்கை யர்க்கு விளக்கன்ன மாதையும்
செங்கை பற்றினன் றேவருங் கைதொழப்
பங்க யத்தயன் பண்டு தன் பாதத்தின்
அங்கை யிற்றந்த கங்கையி னாடினான்.

மங்கையர் குலத்துக்கு விளக்கைப் போன்ற சீதையைத் தன் செங்கையால் பற்றிக்கொண்டு, தேவர்களும் கை

கூப்பித்தொழும்படி, தாமரை மலரில் வீற்றிருக்கும் அயன், முற்காலத்தில் (திருவிக்கிரம அவாதரத்தில் தன் காலைக் கழுவிய நீர் கங்கையாகப் பெருக்கெடுத்தது) தன் பாதங்களைக் கழுவிய கங்கையில் நீராடினான்.

17. கன்னி நீக்கருங் கங்கையுங் கைதொழாப்
பன்னி நீக்கரும் பாதகம் பாருளோர்
என்னி னீக்குவர் யானுமின் றெற்றந்த
உன்னி னீக்கினெ னுய்ந்தனெ னாலென்றாள்.

இளமை குன்றாத கங்கை எனும் பெண் கை கூப்பி வணங்கி, உலகத்திலுள்ளவர்கள் சொல்லி நீக்க முடியாத பாவத்தை என்னிடத்து மூழ்குவதால் போக்கிக் கொள்வார்கள். அந்தப் பாவங்களை எல்லாம் இன்று என்னைத் தந்த உன்னிடத்தில் (நீ என்னிடத்தில் மூழ்கியதால்) போக்கிக் கொண்டேன். நான் நல்வாழ்வு பெற்றேன் என்று கூறினாள்.

18. வெங்க ணாகக் கரத்தினன் வெண்ணிறக்
கங்கை வார்சடைக் கற்றையன் கற்புடை
மங்கை காண நின் றாடுகின் றான்வகிர்த்
திங்கள் சூடிய செல்வனிற் றேன்றினான்.

கொடுங் கண்களையுடைய யானையின் துதிக்கை போன்ற கைகளுடன் வெண்மையான கங்கை நீரொழுகும் சடைத்தொகுதி (தோன்ற) கற்புடைய சீதை காணுமாறு நீராடும் இராமன் பிறைச் சந்திரனை முடியில் சூடியுள்ள சிவபெருமானைப் போல் தோன்றினான்.

19. தள்ளு நீர்ப்பெருங் கங்கைத் தரங்கத்தால்
வள்ளி நுண்ணிடை மாமல ராளொடும்
வெள்ளி வெண்ணிறப் பாற்கடன் மேலை நாட்
பள்ளி நீங்கிய பான்மையிற் றோன்றினான்.

விரைந்தோடும் நீர் நிறைந்த கங்கையின் அலைகளினால், முன்னாளில், வள்ளிக் கொடிபோன்ற நுண்ணிய இடையை உடையவளும் தாமரை மலரில் தங்கியிருப்பவளுமான இலக்குமியுடன், வெண்மையான பாற்கடலில் துயிலிருத்தலைவிட்டு எழுந்து நின்றதைப்போல் தோன்றினான்.

20. வஞ்சி நாண விடைக்கு மடநடைக்கு
அஞ்சி யன்ன மொதுங்க வடிக்குமென்
கஞ்ச நீரி லொளிப்பக் கயலுகப்
பஞ்சி மெல்லடிப் பாவையு மாடினாள்

இடைக்கு ஒப்பாகாமையின் வஞ்சிக் கொடி நாண, அழகிய நடைக்குத் தோற்ற அன்னம் ஒதுங்கிச் செல்ல, அவளுடைய அடிகளையொத்த தாமரைகள் நீரில் மறைய, கண்ணுக்கு ஒப்பாகாமையால் கயல் மீன்கள் ஒதுங்க, செம்பஞ்சூட்டப் பெற்ற மெல்லிய அடிகளை உடைய பாவை போன்ற சீதையும் நீராடினாள்.

21. தேவ தேவன் செறிசடைக் கற்றையுட்
கோவை மாலை யெருக்கொடு கொன்றையின்
பூவு நாறலள் பூங்குழற் கற்றையின்
நாவி நாண்மலர் கங்கையு நாறினாள்.

தேவர்களுக்கத் தேவனான சிவபெருமானின் அடர்ந்த சடைக் கற்றையினுள் மாலையாகச் சூடப் பெற்ற எருக்கு, கொன்றைப் பூக்களின் மணத்தை வீசாமல் சீதையின் அழகிய கூந்தலில் தடவிய கஸ்தூரிப் புழுகெண்ணெய் மணத்தையும், அன்றலர்ந்த மலர்களின் மணத்தையும் வீசினாள் கங்கை.

22. நுரைக்கொ ழுந்தெழுந்தோடி நுடங்கலால்
நரைத்த கூந்தலி னங்கைமந் தாகினி
உரைத்த சீதை தனிமையை யுன்னுவாள்
திரைக்கை நீட்டிச் செவிலியி னாட்டினாள்

(அலைகளின் மேல்) நுரைகள் எழுந்து அசைவதால் நனைந்த கூந்தலையுடைய பெண்ணைப்போல் காணப்படும் கங்கை, சிறப்பித்துப் பேசப்படும் சீதை தனியாக இருப்பதை நினைத்த செவிலித் தாயைப்போல் அலையாகிய கைகளை நீட்டி நீராடச் செய்தாள்.

23. மங்கை வார்குழற் கற்றை மழைக்குலம்
தங்கு நீரிடைத் தாழ்ந்து குழைப்பன
கங்கை யாற்றுட னாடுங் கரியவள்
பொங்கு நீர்ச்சுழி போவன போன்றவே

சீதையின் நீண்ட கூந்தலாகிய மேகம் அவிழ்ந்து தொங்கி நீரில் நனைந்து அசைவது கங்கையாற்றின் இடையே ஓடும்

கருநிறமுடைய யமுனை ஆற்றின் பொங்கும் நீர்ச்சுழி போன்றுள்ளது.

24. சுழிபட் டோடிய தூங்கொலி யாற்றுத்தன்
விழியிற் சேலுகள் வானிற வெள்ளத்து
முழுகித் தோன்றுகின் றாண்முதற் பாற்கடல்
அழுவத் தன்றெழு வாளென லாயினாள்

சுழிகளோடு கூடிய, அலை மிகுந்த, ஒலி செய்யும் கங்கையாற்றின் விழிகளைப்போன்ற சேல்மீன்கள் துள்ளிக் குதிக்கும் வெண்மையான வெள்ளத்தில் மூழ்கி வெளிப்படும் சீதை, ஆதிகாலத்தில் திருப்பாற்கடலினின்று எழுந்த அவள் (இலக்குமி) என்று சொல்லும் படியாகத் தோன்றினாள்.

25. செய்ய தாமரைத் தான்பண்டு தீண்டலால்
வெய்ய பாதகந் தீர்த்து விளங்குவாள்
ஐயன் மேனி யெலா மளைந் தாளினி
வைய மாநர கத்திடை வைகுமோ?

முன்னொரு காலத்தில் செந்தாமரை மலர் போன்ற திருவடிகளைத் தொட்டதால் கொடிய பாவங்களைப் போக்கிக் கொண்டு விளங்குபவள் (இப்போது) இராமன் உடம்பு முழுதும் தீண்டப் பெற்றாள். இனி இவ்வுலகம் பெரிய நரகத்துக்கிடையில் இருக்குமோ?

26. துறைந றும்புன லாடிச் சுருதியோர்
உறையு ளெய்தி யுணர்வுடை யோருணர்
இறைவற் கைதொழு தேந்தெரி யோம்பிப்பின்
அறிஞர் காதற் கமைவிருந் தாயினான்.

கங்கை ஆற்றுத் துறையில் நீராடி, வேதம் பயில்வோர் வாழுமிடத்தை அடைந்து, ஞானிகள் வணங்கும் இறைவனைக் கைதொழுது, தீக்கடன்களைச் செய்து முடித்துப் பின்னர் அம்முனிவர்களின் அன்பு விருந்தினன் ஆனான்.

27. வருந்தித் தான்றர வந்த வமுதையும்
அருந்து நீரென் றமரரை யூட்டினான்
விருந்து மெல்லட குண்டு விளங்கினான்
திருந்தி னார்வயிற் செய்தன தேயுமோ.

தான் வருந்திக் கிடைத்த அமுதைத்தான் உண்ணாமல் அருந்துவீர் எனத் தேவர்களுக்கு ஊட்டினவனான திருமாலின் அவதாரமாகிய இராமன் (முனிவர்கள்) கொடுத்த மெல்லிய இலையுணவை உண்டான். மனம் செம்மைப்பட்டிருப்பவரிடத்து செய்த செயல் குறைபடுமோ?

## குகனின் வருகை

28. ஆய காலையி னாயிர மம்பிக்கு
நாய கன்போர்க் குகனெனு நாமத்தான்
தூய கங்கைத் துறைவிடுந் தொன்மையான்
காயும் வில்லினன் கற்றிர டோளினான்.

அப்போது ஆயிரம் மரக்கலங்களுக்குச் சொந்தக்காரனும் கங்கையில் நீண்ட காலமாக படகு விடும் உரிமையாளனும் மலைபோல் திரண்ட தோள்களை உடையவனும் (பகைவர்களை அழிக்கும்) வில்லை உடையவனுமான, போர்த்தொழிலில் வல்லவனான குகனெனும் பெயரினன்.

29. துடிய னாயினன் றோற்செருப் பார்த்தபேர்
அடிய னற்செறிந் தன்ன நிறத்தினான்
நெடிய தானை நெருங்கலி னீர்முகில்
இடியி னோடெழுந் தாலன்ன வீட்டினான்

துடி என்னும் பறையையும் வேட்டை நாய்களையும் தோல் செருப்பணிந்த பெரிய அடிகளையும் உடையவனும் இருள் என்பது ஒன்று கூடியுள்ளது போன்ற (கரிய) நிறமுடையவனும், தன்னுடைய பெரிய படை நெருங்கி வருவதனால் நீர் நிறைந்த மேகம் முழுதும் எழுந்ததைப் போன்ற தோற்றத்தை உடையவனுமான குகன்.

30. கொம்பு துந்துமி கோடதிர் பேரிகை
பம்மபை பம்பு படையினன் பல்லவத்
தம்ப னம்பிக்கு நாத னழிகவுள்
தும்பி யீட்டம் புரைகிளை சுற்றத்தான்.

கொம்பு, துந்துபி, சங்கு, அதிர்ந்து ஒலிக்கும் பேரிகை, பம்பை, போன்ற இசைக் கருவிகள் நிறைந்துள்ள படையை உடையவன், இலை போன்ற அம்புகளை உடையவன்,

ஓடங்களுக்குத் தலைவன், மதநீர் ஒழுகும் கன்னத்தை உடைய யானைகளை நத்த சுற்றத் தாரை உடையவன்.

31. காழ மிட்ட குறங்கினன் கங்கையின்
ஆழ மிட்ட நெடுமையி னானரைத்
தாழ விட்டசெந் தோலன் றயங்குறச்
சூழ விட்ட தொடுபுலி வாலினான்.

இடையிலிருந்து தொடை வரை காழம் என்னும் உடை உடுத்தியவன், கங்கையாற்றின் ஆழத்தை அறிந்த பெருமை யுடையவன், அரை (இடுப்பு)யிலிருந்து அழகுகொடு விளங்குமாறு இடையைச் சுற்றி (தொங்கவிடப்பட்ட) புலி வால்களைக் கட்டிக் கொண்டிருந்தான்.

32 பற்றொடுத் தன்ன பல்சூற் கவடியன்
கற்றொடுத் தன்ன போலுங் கழலினான்
அற்றொடுத் தன்ன குஞ்சியி னாள்கதிர்
நெற்றொடுத்து நெரிந்த புருவத்தான்.

பற்களை வரிசையாகத் தொடுத்தது போன்ற புடைத்துக் கொண்டிருக்கும் பல வண்ண சோழி மாலையணிந்து கற்களைக் கொண்டு தொடுக்கப்பட்டதைப் போன்ற கழலணிந்தவன், இருளைத் தொடுத்துக் கட்டினாற் போன்ற தலைமுடியில் நெற்கதினாச் செருகிக் கொண்ட நெரிந்த புருவத்தான்.

33. பெண்ணை வன்செறும் பிற்பிறங் கிச்செறி
வண்ண வன்மயிர் வார்ந்துயர் முன்கையான்
கண்ண கன்றட மார்பினுங் கல்லினான்
எண்ணெ யுண்ட விருள்புரை மேனியான்.

பனை மரத்தின் வலிய சிறாம்புபோல் விளக்கமாக நெருங்கியுள்ள, அழகிய வலிமையான மயிர் நீண்டு உயர்ந்து தோன்றும் முன்கையை உடையவன் இடமகன்ற பெரிய மார்பு என்னும் கல்லை உடையவன் எண்ணெய் பூசப்பெற்ற மேனியை உடையவன்.

34. கச்சொடார்த்த கறைக்கதிர் வாளினன்
நச்ச ராவு நடுக்குற நோக்கினன்
பிச்ச ராமன்ன பேச்சின னிந்திரன்
வச்சி ராயுதம் போலு மருங்கினான்.

*அரைக் கச்சுடன் சேர்த்துக் கட்டப்பெற்ற இரத்தக்கறை படிந்துள்ள ஒளிவீசும் வாளை உடையவன், நச்சுப் பாம்பும் நடுங்கும்படியான பார்வை உடையவன் பித்தர் போல் (பொருத்தமில்லாமல்) பேசுகிறவன், இந்திரனின் வச்சிராயுதம் போன்ற வலிமையான இடுப்பை உடையவன்.*

**35. ஊற்ற மேமிக வூனொடு மீனுகர்**
**நாற்ற மேய நகையின் முகத்தினான்**
**சீற்ற மின் றியுந் தீயெழ நோக்குவான்**
**கூற்ற மஞ்சக் குமுறுங் குரலினான்.**

*வலிமை மிகுமாறு இறைச்சியொடு மீனையும் உண்ணால் புலால் நாற்றம் வீசும் சிரிப்பு இல்லாத முகத்தான், கோப மின்றியும் தீப் பொறி பறக்கும்படியாகப் பார்ப்பவன் இயமனும் அஞ்சும்படியாக அதிர்ந்து பேசும் குரலை உடையவன்.*

**36. சிருங்கி பேர மெனத்திரைக் கங்கையின்**
**மருங்கு தோன்று நகருறை வாழ்க்கையன்**
**ஒருங்கு தேனொடு மீனுப காரத்தன்**
**இருந்த வள்ளலைக் காணவந் தெய்தினான்.**

*அலைகளையுடைய கங்கையாற்றின் கரையில் விளங்கும் சிருங்கிபேரம் என்னும் நகரில் வாழ்பவன், தேனும் மீனும் சேர்த்து எடுத்துக் கொண்டு அங்கு தங்கியிருந்த இராமனைக் காணவந்தான்.*

**37. சுற்ற மப்புற நிற்கச் சுடுகணை**
**விற்று றந்துரை வீக்கிய வாளொழித்**
**தற்ற நீத்த மனத்தின னம்பினன்**
**நற்ற வப்பள்ளி வாயிலை நண்ணினான்.**

*சுற்றத்தார்கள் வெளியிலே ஒதுங்கி நிற்க, கொல்லும் வில்லம்பை நீக்கிவிட்டு, இடையில் கட்டிய வாளை நீக்கிவிட்டு, தூய்மையான உள்ளத்தோடு, (இராமனிடம்) கொண்ட அன்போடு (இராமன் தங்கியிருந்த முனிவர்களின்) தவப்பள்ளியை அடைந்தான்.*

**38. நின்றா னெஞ்சி னிரம்புறு மன்பால்**
**இன்றே நின்பணி செய்திட விறைவா**

நன்றே வந்தன னாயடி யேன்யான்
என்றே கூவின னெயினரி னிறையோன்.

*வேடர்களுக்கு அரசனான குகன், நின்று நெஞ்சில் நிறைந்த அன்புடன், தலைவனே! நாய்போல் இப்போதே உனக்குப் பணி செய்ய வேண்டுமென்று வந்தேன் என்று உரக்கக் கூவினான்.*

## இலக்குவன் குகனை வினவுதல்

39. கூவ முன்ன மிளையோன் குறுகி நீ
யாவன் யாவென வன்பி னிறைஞ்சினான்
தேவ நுங்கழல் சேவிக்க வந்தனென்
நாவ வேட்டுவ னாயடி யேனென்றான்.

*குகன் அவ்வாறு கூவியவுடன் முதல் இராமனுக் இளையவனாகிய இலக்குவன் அவன் அருகில் வந்து "நீ யார்" வந்த காரியம் யாது என்று வினவினான். அவனைக் குகன் அன்போடு வணங்கி "அரசே" நாய்போல் அடிமைப் பட்டவனாகிய யான் (கங்கையில்) நாவாய் ஓட்டும் வேடன் உன் திருவடிகளை வணங்க வந்தேன் என்று கூறினான்.*

## 40. இலக்குவன் இராமனுக்குக் குகன் வரவுணர்த்தல்

நிற்றியீண் டென்று புக்கு நெடியவற் றொழுது தம்பி
கொற்றவ நின்னைக் காணக் குறுகின னிமிர்ந்த கூட்டச்
சுற்றமுந் தானு முள்ளந் தூயவன் றாயி னல்லன்
எற்று நீர்க்ங்கை நாவாய்க் கிறைகுக னொருவனென்றான்.

*(அது கேட்ட இலக்குவன்) இங்கே நிற்பாயாக என்று கூறிவிட்டு (தவச் சாலையின்) உள்ளே சென்று பெருமை பொருந்திய இராமனைத் தொழுது வெற்றி வீரனே! உள்ளத் தூய்மையுடையவனும் தாயைக் காட்டிலும் நல்லெண்ண முள்ளவனும் மோதுகின்ற நீரோடும் கங்கையில் நாவாய்களுக்குத் தலைவனும், குகனெனும் பெயருடையவனும், திரளான சுற்றத்தாரோடு நின்னைக் காணக் காத்துள்ளான் என்றான்.*

## குகன் வந்து இராமனைப் பணிதல்

41. அண்ணலும் விரும்பி யென்பா லழைத்திநீ யவனை
யென்னப்
பண்ணவன் வருகவென்றான். பரிவினன் விரைவிற்
புக்கான்
கண்ணனைக் கண்ணி னோக்கிக்கனிந்தன னிருண்ட
குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி வளைத்துவாய் புதைத்து
நின்றான்.

*(இலக்குவன் கூறக் கேட்ட) இராமனும் மனமுவந்து அவனை அழைத்து வருக என்றான். பண்புள்ள இலக்குவன் "வருக" என்று கூற (குகன்) அன்போடு விரைந்து புகுந்து கண்ணழகுடைய இராமனைக் கண்ணாரக் கண்டு களிப்படைந்து கருத்த மயிர் நிறைந்த தலை மண்ணில்படுமாறு பணிந்து வாய் பொத்தி நின்றான்.*

## குகனுடைய வணக்கமும் வேண்டுகோளும்

42. இருத்தியீண் டென்னலோடு மிருந்தில னெல்லை நீத்த
அருத்தியன் றேனு மீனு மமுதினுக் கமைந்த வாகத்
திருத்தினென் கொணர்ந்தே னென்கொறிருவுள
மென்ன வீரன் விருத்தமா தவரை நோக்கி முறுவலன்
விளம்ப லுற்றான்.

*இராமன் (குகனை) இரு என்றான். ஆனால் அமராமல் அளவிறந்த அன்பினனான குகன் இராமனை நோக்கி உணவுக்குப் பொருத்தமான தேனும், சமைத்த உணவும் கொண்டு வந்துள்ளேன். உன் திருவுள்ளம் எப்படியோ என்று கேட்க வீரனான இராமன் முதிய தவசிகளைப் பார்த்து முன்முறுவலோடு கூறலானான்.*

## இராமன் கூறுதல்

43. அரியதா முவப்ப வுள்ளத் தன்பினா லமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த வென்றால முதினுஞ் சீர்த்த
வன்றே

**பரிவினிற் றழீஇய வென்னிற் பவித்திர மெம்ம**
**னோர்க்கும்**

**உரியன வினிதி னாமு முண்டனென மன்றோ**
**வென்றான்.**

*உள்ளத்தில் உள்ள அன்பினடிப்படையில் அமைந்த காதல் வெளிப்படும்யாகக் கொண்டு வந்தவை என்றால் (இவை) அமுதத்தை விட உயர்ந்தவை அன்றோ? (உணவு எப்படிப் பட்டதாயினும்) அன்பொடு பொருந்திவையாயின் தூய்மையானவையே. எம் போன்றவர்களுக்கும் உரியவை. நாம் உண்டதற்குச் சமமாகும் என்றான்.*

விருந்தினருக்குக் கொடுக்கும் உணவு எப்படிப் பட்டது என்பது முக்கியமன்று. விருந்தினரின் தகுதிக்கு ஏற்ப அது பெருமை பெறுகிறது என்னும் திருக்குறள்.

**"இணைத்துணைத் தென்பதொன்று இல்லை**
**விருந்தின்**
**துணைத் துணை வேள்விப் பயன்"** *(87)*

ஒப்பு நோக்கத் தக்கது.

**44.** **சிங்கவே றனைய வீரன் பின்னருஞ் செப்பு வான்யாம்**
**இங்குறைந் தெறிநீர்க கங்கை யேறுது நாளை யானர்ப்.**
**பொங்குநின் சுற்றத்தோடும் போயுவந் தினிதுன் னூரில்**
**தங்கி நீ நாவா யோடுஞ் சாருதி விடிய லென்றான்.**

*ஆண் சிங்கம் போன்ற இராமன் மேலும் சொல்கிறான். யாம் இன்று இங்குத் தங்கி, நாளை அலை வீசும் கங்கையாற்றைக் கடக்க வேண்டும். நீ மிகுந்த உன் சுற்றத்தாரோடு ஊர் சென்று இரவுதங்கியிருந்து விடியற்காலை நாவாயோடு வருக என்றான்.*

**45.** **கார்குலா நிறத்தான் கூறக் காதலா னுணர்த்து வானிப்**
**பார்குலாஞ் செல்வ வுன்னை யிங்ஙனம் பார்த்த**
**கண்ணை**

ஈர்கிலாக் கள்வ னேனா னின்னலி னிருக்கை நோக்கித்

தீர்கிலே னான தைய செய்குவெ னடிமை யென்றான்.

மேகம் போன்ற நிறத்தை உடைய இராமன் கூற அன்பனான அந்தக் குகன் கூறுகிறான். இந்த உலகம் முழுதும் விளங்கும் செல்வனே! உன்னை இந்த நிலையில் கண்ட என் கண்களைப் பிடுங்கி எறியாத நான் கள்வனாவேன். இந்தப் பெரிய துன்பத்தோடு (உன்னைவிட்டு) என் இருப்பிடம் நோக்கிச் செல்லத் துணிந்திலேன். உனக்கு அடிமை செய்வேன் என்றான்.

**இராமன் குகனை அன்று தம்மோடு இருக்கச் சொல்லல்**

46. கோதைவிற் குரிசி லன்னான் கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கித் தம்பி திருமுக நோக்கித் தீராக்
காதலனாகுமென்று கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினி மினிய நண்ப விருத்தியின் றெம்மோ டென்றான்.

வெற்றி மாலை சூடிய வில்லேந்திய சிறந்த தலைவனான இராமன் அந்தக் குகன் கூறியது கேட்டு சீதையையும் தம்பி இலக்குவனையும் பார்த்து இவன் நமக்குக் தீராத காதலன் (பக்தன்) ஆவான், என்று கூறி, எல்லாப் பொருள்களைக் காட்டிலும் மேம்பட்ட நண்பனே! இவ்விடத்தில் எம்மோடு இருப்பாயாக என்றான்.

**குகன் காவலுக்கு அமைதல்**

47. அடிதொழு துவகை தூண்ட வழைத்தன னாழியன்ன
துடியுடைச் சேனை வெள்ளம் பள்ளியைச் சுற்றவேவி
வடிசிலை பிடித்து வாளும் வீக்கிவா யம்பும் பற்றி
இடியுடை மேக மென்ன விணையடி யெய்தி நின்றான்.

குகன் இராமனுடைய பாதங்களைத் தொழுது மகிழ்ச்சி அதிகரிக்க துடியென்னும் பறையை உடைய கடல் போன்ற சேனை வெள்ளத்தை அழைத்து இராமன் தங்கியுள்ள பள்ளியைச் சுற்றிக் காவல் புரியுமாறு ஏவி, அழகிய வில்லைக்

*கையில் பிடித்துக் கொண்டு, வாளும் அம்பும் பற்றிக் கொண்டு இடியை உடைய மேகத்தைப் போல் (இராமனின்) இரு அடிகளையும் வணங்கி நின்றான்.*

**குகன் இராமன் வனம் போந்த வரலாறுணர்ந்து வருந்தல்**

48. **திருநகர் தீர்ந்த தன்மை மானவ தெரித்தி யென்னப்
பருவர றம்பி கூறப் பரிந்தவன் பையு ளெய்தி
இருகணீ ரருவி சோரக் குகனுமாண் டிருந்தானென்னே
பெருநிலக் கிழத்தி நோற்றும் பெற்றிலள் போலு
மென்னா.**

*மனு குலத்தவனே! நீங்கள் அழகிய அயோத்திமா நகரத்தை விட்டு நீங்கி வந்த காரணத்தைத் தெரிவிப்பாயாக என்று கேட்கிறான். மனம் வருந்தும் இலக்குவன் கூற, பரிவு கொண்ட குகன் மிகவும் மனம் வருந்தி பெரிய நிலமாகிய பூமி தேவி தவம் செய்தவளாயினும் (இராமன் ஆளுவதைப்) பெற்றிலள் போலும் என்று சொல்லி இரு கண்களிலும் நீர் பெருக நின்றான்.*

**கதிரவன் மறைதல்**

49. **விரியிருட் பகையை யோட்டித் திசைகளை வென்று
மேனின்
றொருதனித் திகிரி யுந்தி யுயர்புகழ் நிறுவி நாளும்
இருநிலத் தெவர்க்கு முள்ளத் திருந்தருள் புரிந்து வீந்த
செருவலி வீரனென்னச் செங்கதிர்ச் செல்வன்
சென்றான்.**

*விரிந்த இருளாகிய பகையை விரட்டி திக்குகளையெல்லாம் வென்று மேலே இருந்து ஒப்பற்ற ஆட்சி செலுத்தி சிறந்த புகழை நிலைநாட்டி, காலமெல்லாம் இப்பெரிய உலகத்திலுள்ளவர்கள் உள்ளங்களிலெல்லாம் தங்கியிருந்து அருள்புரிந்து இறந்து பட்ட மாவீரன் என்று சொல்லும்படியாக மறைந்தான்.*

**இரவில் இலக்குவன் காவல் புரிதல்**

50. **மாலைவாய் நியமஞ் செய்ய மரபுளி யியற்றி வைகல்
வேலைவா யமுத னாளும் வீரனும் விரித்த நாணற்**

பாலவாம் பாரின்பாயல் வைகினர் பருவி லேந்திக்
காலைகாண் பளவுந் தம்பி யிமைப்பிலன் காத்து
நின்றான்.

மாலையில் செய்ய வேண்டிய கடன்களை முடித்துக் கொண்டு அங்குத் தங்கிய இராமனும் பாற்கடலில் தோன்றிய அமுதம் போன்ற சீதையும் நிலத்தில் பரப்பிய நாணற் புல்லாலாகிய பாயலில் தங்கினார்கள். தம்பி இலக்குவன் கட்டமைந்த வில்லைக் கையிலேந்திக் கொண்டு விடியற் காலம் வரை கண் இமை கொட்டாமல் காவல் புரிந்து நின்றான்.

51. வெயில் விரி கனகக் குன்றத் தொழில்கெட விலகு
சோதிக்
கயில்விரி வயிரப் பைம்பூண் கடுந்திறன் மடங்க
லன்னான்
துயிலெனு மணங்கு வந்து தோன்றலு மவளை நாமே
எயிலுடை யயோத்தி மூதூ ரெய்துநா ளெய்து
கென்றான்.

(ஒளி வீசும் தங்கமயமான மேருமலையின் அழகு கெடும்படியாக விட்டு விட்டு ஒளி வீசும் வைரங்கள் பதிக்கப்பெற்ற பொன்னணிகளைப் பூணுதற்குரிய மிக்க வலிமையுடைய சிங்கத்தையொத்தவன் (இலக்குவன்) உறக்கமெனும் மாது தோன்ற அவளை நாம் மதில்களை உடைய அயோத்தியை அடையும் போது வருக என்றான்.)

52. மறக்கண்வா ளிளைய வீர ணாணையை மறுத்தல்
செல்லா
உறக்கமா மாது மண்ண லுபயபங் கயங்கள் போற்றித்
துறக்கமா மென்ன லாய தூமதி லயோத்தி யெய்த
இறுக்குநா ளெந்தை பாத மெய்துவ னென்னப்
போனாள்.

வீர வாளேந்திய இலக்குவனின் ஆணையை மறுக்க இயலாத உறக்கமாகிய பெண்ணும் இலக்குவனுடைய பாதங்களைப் போற்றி மேலுலகம் போன்ற அயோத்தியை அடைந்து தங்கும் நாளில் உன் பாதங்களைப் பற்றுவேன் என்று சொல்லிப் போனாள்.

53. மற்றவ ளிறைஞ்சி யேக மாமலர்த் தவிசி னீங்காப்
பொற்றொடி யோடு மையன் ருயிறரு புன்மை நோக்கி
இற்றதோர் நெஞ்ச னாகி யிருகணீ ராருவி சோர
உற்றவோ வியம தென்ன வொருசிலை யதனி
னின்றான்.

*அந்த உறக்கமெனும் மாது வணங்கி நீங்க, சிறந்த மலர்ப்படுக்கையை விட்டு நீங்காத பொன்னாலான அணிகலன்களை அணிந்த சீதையோடு இராமன் தூங்கும் சிறுமையை நோக்கி ஒடிந்த நெஞ்சத்தோடு இருகண்களிலிருந்தும் அருவி போல் நீர் பெருக துன்ப நிலையோடு தோன்றும் ஓவியத்தைப்போல ஒப்பற்ற வில்லோடு நின்றான்.*

## குகன் வருந்துதல்

54. தும்பியின் குழாத்திற் சுற்றுஞ் சுற்றத்தன் றெடுத்த
வில்லன்
வெம்பிவெந் தழியா நின்ற நெஞ்சினன் விழித்த
கண்ணன்
தம்பிநின் றானை நோக்கித் தலைமகன் றனிமை
நோக்கி
அம்பியின் றலைவன் கண்ணீ ரருவிசோர் குன்றி
னின்றான்.

*ஓடங்களுக்கு உரியவனான குகன் யானைக் கூட்டத்தைப் போல் சூழ்ந்துள்ள இனத்தாரை உடையவனாய் நாணேற்றப் பட்ட வில்லை ஏந்தியவனாய் வருந்தி நொந்த நெஞ்சினனாய் விழித்த கண்களோடு நிற்கும் தம்பியைப் பார்த்து தலைவனாம் இராமனையும் பார்த்து அருவிப் பெருகும் குன்றைப் போல் கண்ணீருடன் நின்றான்.*

55. துறக்கமே முதல வாய தூயன யாவை யேனும்
மறக்குமா நினைய லம்மா வரம்பில தோற்ற மாக்கள்
இறக்குமா றிதுவென் பான்போன் முன்னை
நாளிறந்தான்பின்னாட்
பிறக்குமா றிதுவென் பான்போற் பிறந்தனன் பிறவா
வெய்யோன்

*55. பிறத்தல் இல்லாத சூரியன் வரம்பில்லாமல் தோன்றிய உயிரினங்களெல்லாம் இறக்கும் முறை இது வெனக் காட்டுவதைப் போல் முதல் நாள் இறந்தவன் பின் னாளில் பிறக்கும் வகையை உணத்துவது போல் உதித்தான். மேலுலகத்தோர் முதல் யாவாராயினும் இதை மறக்கலா காது.*

**56. சேஞ்செவே சேற்றிற் றேன்றுந் தாமரை தேரிற்றோன்றும்**
**வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கிய விரிந்த வேறோர்**
**அஞ்சனநாயி றன்ன வையனை நோக்கிச் செய்ய**
**வஞ்சிவாழ் வதன மென்னுந் தாமரை மலர்ந்த தன்றே.**

*56. சேற்றில் தாமரை தோன்றும். சூரியனாகிய ஒற்றைச் சக்கரத் தேரில் வெஞ்சுடர் தோன்றும். கருஞாயிறு போன்ற இராமனைப் பார்த்து, வஞ்சிக் கொடி போன்ற சீதையின் வாழும் வதனமென்னும் சிவந்த தாமரை மலரும்.*

## இராமன் படகுகொண்டுவரக் குகனை ஏவுதல்

**57. நாண் முதர் கமைந்த யாவு நயந்தன னியற்றி நாமத்**
**தோண்முதற் கமைந்த வில்லான் மறையவர் தொடரப்போனான்**
**ஆண்முதற் கமைந்த கேண்மை யன்பனை நோக்கி பைய**
**கோண்முதற் கமைந்த நாவாய் கொணருதி விரைவி னென்றான்.**

*அஞ்சத்தக்க தோளக்கு இசைந்த வில்லமைந்த இராமன் நாட் கடமைகளைச் செய்து முடித்து வேதியர்கள் பின் தொடர்ந்துவரப் புறப்பட்டு அடிமை செய்ய இசைந்த அன்பன் குகனைப் பார்த்து (தங்களைச்) சுமந்து செல்லும் ஓடத்தைக் விரைந்து கொணரச் சொன்னான்.*

## 21 குகனுடைய வேண்டுகோள்

### (கலிவிருத்தம்)

58. ஏவிய மொழிகேளா விழிபுனல் பொழிகண்ணான்
ஆவியு முலைகின்றா னடியினை பிரிகல்லான்
காவியின் மலர்காயா கடன் மழை யனையானைத்
தேவியொ டடிதாழாச் சிந்தனை யுரை செய்வான்.

*(இராமன்) கூறியதைக் கேட்டு நீர் சொரியும் கண்களோடு உயிர்வாடுகின்றவனாகி (இராமனுடைய) அடிகளை விட்டுப் பிரிய மனமில்லாமல் சீதையுடன் கருங்குவளை, காயாம்பூ, கடல், கருமேகம் ஆகியவற்றை ஒத்த இராமனின் அடிகளை வணங்கித் தன் கருத்தைச் சொல்லலானான்.*

### தன் நகரில் தங்கியிருக்குமாறு குகன் இராமனை வேண்டுதல்

59. பொய்ம்முறை யலராவெம் புகலிடம் வனமேயாம்
கொய்ம்முறை யுறுதாரோய் குறைவிலெம்
வலியேமால்
செய்ம்துறை குற்றேவல் செய்குது மடியோமை
இம்முறை யுறவென்னா வினிதிரு நெடி தெம்மூர்.

*பொய்யான வாழ்க்கையில்லாத நாங்கள் வாழும் இடம் வனந்தான் என்றாலும் மாலையணிந்தவனே! நாங்கள் குறைவிறைவில்லாதவர்கள், வலிமை மிக்கவர்கள் செய்ய வேண்டிய குற்றேவல்களை முறையாகச் செய்வோம். அடிமைகளாகிய உறவுமுறையுள்ள சுற்றம் எனக் கருதி நெடுங்காலம் எங்கள் ஊரில் தங்கி இருப்பாயாக (என்றான்).*

60. தேனுள தினையுண்டாற் றேவரு நுகர்தற்காம்
ஊனுள துணைநாயே முயிருள விளையாடக்
கானுள புனலாடக் கங்கையு முளதன்றோ
நானுள தனையுந்நீ யினிதிரு நாடெம்பால்

*(எங்களிடம்) தேன் உண்டு. தினையுண்டு தேவர்களும் உண்ணத்தக்க புலால் உள்ளது. உனக்குத் துணையாக நாய் போன்ற எங்கள் உயிர் உள்ளது. விளையாடுதற்குக் காடு உள்ளது,*

நீராடுதற்குக் கங்கை உள்ளது. நான் உள்ள வரை நீ இரு. எங்கள் இடத்திற்கு நட.

61. **தோலுள துகில் போலுஞ் சுகமுள தொடர்மஞ்சம்**
**போலுள பரண்வைகும் புரையுள கடிதோடும்**
**காலுள சிலைபூணுங் கையுள கலிவானின்**
**மேலுள பொருளேனும்விரைவொடு கொணர்வேமால்.**

பட்டாடை போன்ற தோல் உள்ளது. இனிய தின் பண்டங்கள் உள்ளன. (உறங்குவதற்கு) பிணித்துத் தொங்க விடப்பட்ட பரண் உள்ளது. தங்குவதற்குக் குடிசைகள் உள்ளன. விரைந்தோடும் கால்களும் விற்பிடித்த கைகளும் உள்ளன. (நீ வேண்டுவது) ஓசை உடைய வானத்திலுள்ள பொருள்களாக இருந்தாலும் விரைந்து கொண்டு வந்து தருவோம்.

62. **ஐயிரு பத்தோடைந் தாயிர ருளரானை**
**செய்குநர் சிலைவேடர் தேவரின் வலியரால்**
**உய்குது மடியோமெங் குடிலிடை யொருநாணீ**
**வைகுதி யெனின் மேலோர் வாழ்விலை**
**பிறிதென்றான்.**

இட்ட கட்டளையைச் செய்ய வில்லேந்திய வேட்டுவர்கள் ஐந்நூறாயிரம்பேர் உள்ளனர். அவர்கள் தேவர்களைக் காட்டிலும் வலிமைமிக்கவர்கள். எங்கள் குடிசையில் நீ ஒருநாள் தங்கியிருந்தாலும் (அதைக் காட்டிலும் எங்களுக்கு) மேலான வாழ்வு பிரிதொன்றில்லை என்றான்.

## இராமபிரான் கூறுதல்

63. **அண்ணலு மதுகேளா வகநிறை யருண்மிக்கான்**
**வெண்ணிற நகைசெய்தான் வீரநின் னுழையாமப்**
**புண்ணிய நதியாடிப் புனிதரை வழிபாடுற்**
**றெண்ணிய சிலநாளிற் குறுகுது மினிதென்றான்.**

இராமனும் குகன் கூறியதைக் கேட்டு, மனம் நிறைந்த அருளுணர்வோடு வெளிப்படையாகச் சிரித்து, வீரனே! புண்ணிய நதிகளில் நீராடி, புனிதமான முனிவர்களை வழிப்பட்டு குறிப்பிட்ட சில நாட்களில் உன்னிடம் வருவோம் என்றான்.

பரதன் தாயரும் சேனையும் சூழ கங்கையைக் கடக்க உதவிய குகனின் இயல்புகளைக் கூறும் படலம் என விரியும்.

பரதன் இராமனைக் காணும் பொருட்டுக் கோசலை, கைகேயி, சுமத்திரை மற்றும் பரிவாரங்களுடன் கங்கையின் வட கரையை அடைகிறான். அங்கிருந்து குகனுடைய உதவியால் கங்கையைக் கடந்து, பாரத்து வாச முனிவருடைய ஆச்சிரமத்தை அடையும் வரை உள்ள செய்திகள் இப்பகுதியில் கூறப்படுகின்றன.

பரதனைச் சேனையுடன் கண்ட குகன், பரதன் இராமன் மேல் படை கொண்டுவருவதாக எண்ணி பரதனோடு போர்புரிய முடிவு செய்கிறான். பின்னர் உண்மை உணர்ந்து பரதனோடு நட்புக் கொண்டு கங்கையைக் கடப்பதற்கு நாவாய் ஓட்டுகிறான். பரதனைப் பாராட்டுகிறான்.

இப்படலத்தில் பரதன் இராமன் மேல் கொண்ட அன்பு நிலையும் பெருந்தன்மையும் புலப்படுகின்றன. குகன் இராமனிடம் கொண்ட அன்பும், அவனுடைய வீரமும் சித்தரிக்கப்படுகின்றன. இப்படலத்தில் கம்பனின் கலை நயம் மிகுந்த கவிதைகள் உள்ளத்தைப் பிணிக்க வல்லன.

## பரதன் சேனையுடன் கங்கையை அடைதல்

### (கலிவிருத்தம்)

1. பூவிரி பொலன் கழற் பொருவி றானையான்
காவிரி நாடென்ன கழனி நாடொரீ இத்
தாவர சங்கம மென்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினான்.

பொலிவு மிக்க பொன்னால் செய்யப்பட்ட வீரக்கழல் அணிந்தவனும் ஒப்பில்லாத படையையுடையவனுமான பரதன் காவிரிபாயும் நாடு போன்ற வயல்கள் நிறைந்த (கோசல) நாட்டைக் கடந்து செடி கொடிகளும் இயங்கும் உயிரினங்களும் இரங்கி வருந்துமாறு கங்கையாற்றை அடைந்தான்.

*வடநாட்டின் கண்ணுள்ள கோசலைநாட்டு வளம் எப்படிப்பட்டது என்றால் வயல்கள் நிறைந்து வளங்கொழிக்கும் காவிரிபாயும் நாடு போன்றது என்று கூறுவது கம்பனின் நாட்டுப்பற்றை விளக்குவதாகும்.*

## *சேனையிலுள்ள யானையின் மிகுதி*

2. **எண்ணருஞ் சுரும்புதம் மினத்துக் கல்லது**
**கண்ணகன் பெரும்புனற் கங்கை யெங்கணும்**
**அண்ணல்வெங் கரிமதத் தருவி பாய்தலால்**
**உண்ணவுங் குடையவு முரித்தன் றாயதே.**

*பரந்து பட்ட இடமெல்லாம் நீர் நிறைந்திருக்கும் கங்கையாற்றின் பல இடங்களிலும் சிறந்த, யானைகளின் மதநீர் பாய்வதால், அளவு கடந்த வண்டுக் கூட்டங்களுக்கு அல்லது உண்ணவும் மூழ்கவும் தகுதியற்றதாயிற்று.*

## *குதிரைகளின் மிகுதி*

3. **அடிமிசைத் தூளிபுக் கடையத் தேவர்தம்**
**முடிமிசைப் பரந்ததோர் முறைமை தேர்ந்திலேம்**
**நெடிதுயிர்த் துண்டவு நீந்தி நின்றவும்**
**பொடிமிசைப் புரண்டவும் புரவி யீட்டமே.**

*குதிரைகளின் கூட்டம் பெருமூச்செறிந்து கொண்டு நீரைக் குடித்து, நீந்திக் கொண்டு, மணலில் புரண்டு கால்களில் படிந்த புழுதி தேவர்களின் முடிகளின் மேல் படிந்ததை அறிந்திலோம்.*

4. **பாலையேய் நிறத்தொடு பண்டு தான்படர்**
**ஓலையேய் நெடுங்கட லோடிற் றில்லையால்**
**மாலையேய் நெடுமுடி மன்னன் சேனையாம்**
**வேலையே மடுத்ததக் கங்கை வெள்ளமே.**

*மாலையணிந்த நெடுமுடி சூடிய பரதனுடைய சேனையாகிய கடல் கங்கை நீரைக் குடித்து விட்டது. பால் போலும் நிறத்தோடு முன்னர் தான் ஓடிச் சேர்ந்த ஓசை மிக்கக் கடலைச் சேரவில்லை.*

## சேனையின் அளவு

5. கான்றலை நண்ணிய காளை பின்படர்
தோன்றலை யவ்வழி தொடர்ந்து சென்றன
ஆன்றவ ருணர்த்திய வக்கு ரோணிகள்
மூன்றுபத் திரட்டியா யிரத்தின் முற்றுமே.

*காட்டை அடைந்த இராமனுக்குப் பின்னே செல்லும் பரதனைப் அவ்வழியாகத் தொடர்ந்து சென்ற படைகள் பெரியவர்கள் சொன்ன அறுபதினாயிரம் அக்ரோணி ஆகும்.*

## படையைக் கண்ணுற்ற குகன் செயல்

6. அப்படை கங்கையை அடைந்த வாயிடைத்
துப்புடைக் கடலினீர் சுமந்த மேகத்தை
ஒப்புடை யண்ணலோ டுடற்ற வேகொலாம்
இப்படை யெடுத்ததென் றெடுத்த சீற்றத்தான்.

## குகனின் சீற்றம்

*பரதனின் படை கங்கையை அடைந்தது கண்ட குகன், பவளத்தை உடைய கடல் நீரைச் சுமந்துள்ள கருமேகத்தை ஒத்த தலைவனாம் இராமனுடன் போர்புரிவதற்கே இப்படை திரண்டு வந்துள்ள தென்று சீற்றங் கொண்டான்.*

7. குகனெனப் பெயரிய கூற்றி னாற்றலான்
தொகைமுரட் சேனையைத் துகளி னோக்குவான்
நகைமிகக் கண்கடீ நாற நாசியிற்
புகையுறக் குனிப்புறும் புருவப் போர்விலான்.

*குகனெப் பெயருடைய இயமனைப் போன்ற ஆற்றல் படைத்தவ அவன் எண்ணற்ற சேனையைத் துசென நினைத்து, (சினத்தல்) சிரித்து கண்களில் தீப்பொறி பறக்க, மூக்கிலிருந்து புகை எழு வளையும் புருவங்களான போர்வில்லை உடையவன்.*

8. மையுற வுயிரெலா மிறுதி வாங்குவான்
கையுறு கவரயில் பிடித்த காலன்றான்
ஐயைந்நூறாயிர முருவ மாயின
மெய்யுறு தானையான் வில்லின் கல்வியான்

*குற்றங்களோடு தொடர்புடைய உயிர்களை எல்லாம் இறுதியில் கவர்தல் பொருட்டு கையில் சூலப்படை தாங்கிய எமனானவன் வியக்கும்படியான ஐந்து நூறாயிரம் உருவம் கொண்டது போன்ற வலிய உடலை உடைய வீரர்களை, உடையவன் விற்றொழில் கல்வி மிக்கவன்.*

9. **கட்டிய சுரிகையன் கடித்த வாயினன்**
**வெட்டிய மொழியினன் விழிக்குந் தீயினன்**
**கொட்டிய துடியினன் குறிக்கும் கொம்பினன்**
**கிட்டிய தமரெனக் கிளருந் தோளினான்.**

*உடைவாளை (இடையில்) கட்டியவன், பற்களைக் கடித்துக் கொண்டு, வெடுக்கென வீரமொழிகளைக் பேசிக்கொண்டு, தீயெழ விழித்து, துடியைக் கொட்டி, கொம்பை ஊதி போர் கிடைத்தது என்று பூரித்த தோள்களை உடையவன்.*

10. **எலியெலா மிப்படை யரவம் யானென**
**ஒலியுலாஞ் சேனையை யுவந்து கூவினான்**
**வலியுலா முலகினில் வாழும் வள்ளுகிர்ப்**
**புலியெலா மொருவழிப் புகுந்த போலவே.**

*இப்படைகளெல்லாம் எலிகள். நான் (அவற்றை உண்ணும்) பாம்பு என்று மகிழ்ந்து ஆரவாரம் மிகுந்த, வலிமை பொருந்திய கூரிய நகங்களையுடைய புலிகளெல்லாம் ஓரிடத்தில் கூடியது போல திரண்ட ஆரவாரம் மிகுந்த சேனையைக் கூவி அழைத்தான்.*

11. **மருங்கடை தென்கரை வந்து தோன்றினான்**
**ஒருங்கடை நெடும்படை யொல்லெனா ர்ப்பினோ**
**டருங்கடை யுகந்தனி லசனி மாமழை**
**கருங்கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே.**

*ஒன்று திரண்ட பெரும்படை, அரிய யுக முடிவுக் காலத்தில் இடியுடன் பெய்த மழையோடு கருங்கடலும் பொங்கி எழுந்தால் எப்படி இருக்குமோ அப்படி பெரிய ஓசையுடன் ஒன்று சேர்ந்து கங்கையாற்றின் தென்கரை வந்து நின்றான்.*

12. தோன்றிய புளிஞரை நோக்கிச் சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை யும்ப ரேற்றுதற்
கேன்றனெ னென்னுயிர்த் துணைவற் கீகுவான்
ஆன்றபே ரரசுநீ ரமைதி ராமென்றான்.

*தன்முன் வந்து குழுமிய வேட்டுவர்களான படை வீரர்களை நோக்கி, என் உயிர்த் தோழனான இராமனுக்கு உரியதான பேரரசைத் தரும் பொருட்டு, சூழ்ச்சியோடு எதிரே வந்து நின்ற சேனையை மேலுலகம் அனுப்பத் துணிந்துள்ளேன் அதற்கு நீங்களும் ஆயத்தமாகுங்கள் என்றான்.*

13. துடியெறி நெறிகளுந் துறையும் சுற்றுற
ஒடியெறி யம்பிகள் யாவு மோட்டலிர்
கடியெறி கங்கையிக் கரைவந் தோர்களைப்
பிடியெறி படவெனாப் பெயர்த்துங் கூறுவான்.

*போர்ப்பறையை முழக்குங்கள், பாதைகளையும் நீர்த் துறைகளையும் அடைத்துப் பாழ்படுத்தி விடுங்கள்; ஓடம் ஒன்றையும் செலுத்தாதீர். காவலை மிகுதிப்படுத்து. கங்கையின் இக்கரைவந்தவர்களைப் பிடித்துக் கொல் என்று மேலும் கூறினான்.*

14. அஞ்சன வண்ணனென் னாருயிர் நாயக னாளாமே
வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடி னாய்க்குக் னென்றெனை
யோதாரோ.

*அஞ்சனம் போன்ற வண்ணமுடையவனும் என் அரிய உயிர் போன்ற தலைவனுமான இராமன் ஆளமுடியாதவாறு வஞ்சனையால் ஆட்சியைக் கைப்பற்றிய அரசரும் வந்தார். தீக்கக்கும் கூரிய அம்புகள் அவர்கள் மேல் பாயாதோ? இவர்கள் (சாகாமல்) பிழைத்துப் போய்விட்டால் என்னை நாய்க்குகன் என்று இழித்துப் பேச மாட்டார்களோ?*

15. ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ

**தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு**
**சொல்லன்றோ**
**ஏழைமை வேட னிறந்தில னென்றெனை யேசாரோ.**

*இவர்கள் மிகவும் ஆழமான பெரிய அலைவீசும் ஆற்றைக் கடந்து விட முடியுமா? (நான்) இவர்களின் பெரிய யானைப் படையைக் கண்டு (அஞ்சி) விலகிவிடும் வில்வீரனா? என்னைத் தன் தோழன் என்று அந்த ராமன் சொன்னது (பொருள் பொதிந்த) சொல்லல்லவா? (நான் இவர்களை விட்டு விட்டால்) எளியவன் / அறிவிலி / கையாலாகாதவன் இறவாமல் இன்னமும் உயிரோடிருக்கிறானே என்று இகழமாட்டார்களா?*

16. **முன்னவ னென்று நினைந்திலன் மொய்புலி**
**யன்னானோர்**
**பின்னவ னின்றன னென்றில னன்னவை பேசானேல்**
**என்னிவ னென்னை யிகழ்ந்ததிவ் வெல்லை**
**கடந்தன்றோ**
**மன்னவர் நெஞ்சினின் வேடர் விடுஞ்சரம்**
**வாயாவோ.**

*இந்தப் பரதன் இராமன் தனக்கு மூத்தவன் என்று நினைக்கவில்லை. அவனுக்குத் துணையாக வலிமைவாய்ந்த புலி போன்றவன் (இலக்குவன்) இருக்கிறான் என்று எண்ணவில்லை. அவற்றைப் பற்றி நினையானாயின் (போகட்டும்) என்ன? இவன் என்னைக்கூடப் பொருட்படுத்தாதது? இந்த எல்லையைக் கடந்துதானே? (இவன் எதையும் செய்ய முடியும்) மன்னர்களின் மார்பகங்களில் வேடர்கள் விடும் அம்புகள் பாயாது என்று நினைக்கிறானா?*

*போதிய போர்க்கருவில் இருந்தால் எளியவர்கள் கூட வலியவர்களை வீழ்தமுடியும் என்று முடியுடை மன்னர்களை எச்சரிக்கிறானா? அல்ல வேடர்களைப் போன்ற ஒடுக்கப்பட்ட மக்களுக்கு உணர்வூட்டுகிறானா?*

17. **பாவமுநின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்**
**ஏவமு மென்பவை மண்ணுல காள்பவ ரெண்ணாரோ**
**ஆவது போகவென் னாருயிர்த் தோழமை**
**தந்தான்மேற்**
**போவது சேனையு மாருயிருங்கொடு போயன்றோ.**

*உலகத்தில் ஆட்சி செய்கிறவர்கள் பாவம், பழி, பகைவர், நட்புடையவர், குற்றம் என்று இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்க மாட்டார்களோ? வியப்பாக இருக்கிறதே!. அது போகட்டும். என் ஆருயிர் போன்ற நட்பைத் தந்தவன் (இராமன்) மேல் (இவன் படை) செல்வது என்பது சேனையும் அவனுடைய உயிரும் அழியாமல் சென்றாலல்லவோ?*

*உலகாள வந்தவர்கள் பழிபாவங்களுக்கு அஞ்சுவதில்லை, பகை, நட்பு, என்று கருதுவதில்லை, நல்லது கெட்டது உணருவதில்லை என்று கிபி. 12ஆம் நூற்றாண்டில் அரசவைப் புலவனாக இருந்த கம்பன் கூறுவது ஆழ்ந்த சிந்தனைக்குரியது.*

18. **அருந்தவ மென்றுணை யாள விவன்புவி யாள்வானோ**
**மருந்தெனினன்றுயிர் வண்புகழ் கொண்டு பின்மாயேனோ**
**பொருந்திய கேண்மை யுகந்தவர் தம்மொடு போகாதே**
**இருந்தது நன்று கழிக்குவெ னென் கடனின்றோடே.**

*என் துணைவன் (இராமன்) செய்தற்கரிய தவத்தை மேற்கொள்ள இவன் (பரதன்) இப்புவியை ஆண்டுவிட முடியுமோ? உயிர் மருந்து போன்றதுதோ என்றால் அன்று. எனவே வள்ளன்மைத் தன்மை நிறைந்த சிறந்த புகழைப் பெறுவதற்காக உயர்விடுவேன். மனத்தில் நிறைந்த நட்பை விரும்பிய என் தலைவனோடு தொடர்ந்து போகாமல் இருந்ததும் நல்லதாயிற்று. என் கடமையை இன்றே செய்து முடிப்பேன்.*

19. **தும்பியு மாவு மிடைந்த பெரும்படை சூழ்வரும்**
**வம்பிய றாரிவர் வாள் வலி கங்கை கடந்தன்றோ**
**வெம்பிய வேட ருளீர்துறை யோடம் விலக்கீரோ**
**நம்பிமுன் னேயினி நம்முயிர் மாய்வது நன்றன்றோ**

*இவர்கள் தங்களின் யானைகளும் குதிரைகளும் நெருங்கிய பெரும்படை, நிறைந்த மணம் வீசும் மாலையணிந்த வாள் வலி மையைக் காட்டுவது கங்கையாற்றைக் கடந்தபின் அன்றோ? சின*

*மிக்க வேடர்களே துறையின் கண்ணுள்ள ஓடங்களை (அவர்களுக்குச் செலுத்தாமல்) விலக்க மாட்டீர்களோ? நமக்குச் சிறந்த இராமனுக்கு முன்னே நம் உயிர்மாய்வது நன்றன்றோ?*

20. **போன படைத்தலை வீரர் தமக்கிரை போதாவிச்**
**சேனை கிடக்கிடு தேவர் வரிற்சிலை மாமேகம்**
**சோனை படக்குடர் சூறை படச்சுடர் வாளோடும்**
**தானை படத்தனி யானை படத்திரள் சாயேனோ.**

*போர்த்தொழிலில் பெயர்போன நம் படையிலுள்ள தலைவர்களுக்கு இரையாவதற்குப் போதாத இச்சேனை கிடக்கட்டும். தேவர்களே வந்தாலும் என்கைவில்லாகிய பெரிய மேகத்திலின்று அம்பு மழை பொழிய பகைப் படை வீரர்களின் குடர் சிதறவும், ஒளி வீசும் வாட்படை ஏந்திய காலாட் படை வீழவும் யானைப் படை அழியவும் அவர்களின் வலிமையை அழிக்க மாட்டேனோ?*

21. **நின்ற கொடைக்கையெ னன்ப னுடுக்க நெடுஞ் சீரை**
**அன்று கொடுத்தவண் மைந்தர் பலத்தை யெனம்பாலே**
**கொன்று குவித்த நிணங்கொல் பிணக்குவை கொண்டோடித்**
**துன்று திரைக்கடல் கங்கை மடுத்திடை தூராதோ.**

*நிலையான கொடைத் தன்மையை உடைய என் அன்பன் (இராமன்) உடுக்குமாறு பெரிய மரவுரியைக் கொடுத்தவளான கையேயியின் மைந்தன் (பரதனின்) சேனையை என் அம்பால் கொன்று குவித்த, கொழுப்பு நிறைந்த, பிணக் குவியலை அடித்துச் செல்லும் கங்கையாறு பெரிய கடலைத்தூர்க்காதோ!*

22. **ஆடு கொடிப்படை சாடி யறத்தவ ரேயாள**
**வேடு கொடுத்தது பாரெனு மிகப்புகழ் மேவீரோ**
**நாடு கொடுத்தவென் னாயக னுக்கிவர் நாமாளும்**
**காடு கொடுக்கில ராகி யெடுத்தது காணீரோ.**

தன் நாட்டைக் கொடுத்த என் தலைவனான இராமனுக்கு இந்தப் பரதன் நாம் ஆளும் காட்டையும் கொடுக்க மனமின்றிப் படையெடுத்து வந்ததைப் பாரீர். அசைந்தாடும் கொடிகட்டப் பட்ட இப்படையை அழித்து, நாட்டை அறத்தின் வடிவினனான இராமனே ஆளும்படியாக வேட்டுவர்கள் கொடுத்தார்கள் என்னும் புகழைப் பெறுவீரோ?

23. மாமுனி வர்க்குற வாகிவ னத்திடை யேவாழும்
கோமுனி யத்தகு மென்று மனத்திறை கொள்ளாமே
ஏமுனை யுற்றிடி லேழு கடற்படை யென்றாலும்
ஆமுனை யிற்சிறு கூழென விப்பொழு தாகாதோ.

பெரிய முனிவர்களோடு உறவு கொண்டு வனத்திடை வாழும் அரசன் (இராமன்) வெறுக்கக் கூடுமென்று மனத்தில் ஐயங் கொள்ளாமல் நான் அம்பு செலுத்த முனைந்தால், ஏழுகடல்களைப் போன்ற பெரும்படை என்றாலும், மாடுகள் மேய முனைந்தால் இளம் பயிர் அழிவதைப் போல், ஆகாதோ?

24. என்பன சொல்லி யிரும்பன மேனிய ரேனோர்முன்
வன்பனை வில்லினன் மல்லுயர் தோளினன்
வாள்வீரற்
கன்பனு நின்றன னின்றது கண்டரி யேறன்ன
முன்பனில் வந்து மொழிந்தனன் மூரிய
தேர்வல்லான்.

வலிய பனைமரம் போன்ற வலிமையுடையவனும், மல்யுத்தத்தில் மேலோங்கியிருக்கும் வலிமை வாய்ந்த தோளையுடையவனும் வாள்போர் செய்வதில் வல்லவனுமான இராமனுக்கு அன்பன். இரும்பு போன்ற வலிய உடம்பை உடைய மற்றவர்களின் முன்னிலையில், ஆண் சிங்கம் போன்ற பரதனிடம் முன்னே வந்து மொழிந்தான் தேரப்பாகனான சுமந்திரன்.

25. கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள்குலத்தனிநாதற் குயிர்த் துணைவனுயர்
தோளான்

**வெங்கரியி னேறனையான் விற்பிடித்த**
**வேலையினான்**

**கொங்கலரு நறுந்தண்டார்க் குகனென்னுங்**
**குறியுடையான்**

*கங்கையின் இருகரைகளிலுள்ள நிலப்பகுதிகளையும் ஆட்சி செலுத்துபவன், எண்ணற்ற ஓடங்களை உடையவன். உங்கள் குலத்தின் ஒப்பற்ற தலைவனான இராமனுக்கு உயிர் போன்ற துணைவன், வலிமைமிக்கவன், சினம் உள்ள ஆண்யானை போன்றவன். வில்லேந்திய வீரர்களான கடலை உடையவன். நறுமணங்கமழும் நல்ல மலர் மாலை அணிந்தவன். குகனென்னும் பெயரை உடையவன். (என்றான்)*

26. **கற்காணுந் திண்மையான் கரைகாணாக் காதலான்**
**அற்காணி கண்டனைய வழகமைந்த மேனியான்**
**மற்காணுந் திருநெடுந்தோண் மழைகாணு**
**மணிநிறத்தாய்**
**நிற்காணு முள்ளத்தா னெறியெதிர்நின்**
**றனனென்றான்.**

*மற்போரில் வல்லதோள்களை உடைய மேகம் போன்ற அழகிய மணி நிறத்தாய்! எல்லை காண முடியாத அன்புடையவனும் இருளுக்கு உறையாணி கண்டாற் போன்ற அழகமைந்த மேனியை உடையவனுமான அவன் உன்னைக் காணும் விருப்பத்தோடு நாம் செல்லும் வழி எதிரில் நிற்கிறான் என்றான்.*

## பரதன் எழுதல்

27. **தன்முன்னே யவன்றன்மை தந்தைதுணை**
**முந்துரைத்த**
**சொன்முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திருமனத்தான்**
**மன்முன்னே தழீஇக் கொண்ட மனக்கினிய**
**துணைவனேல்**
**என்முன்னே யவற்காண்பென் யானே சென்றெனை**
**வெழுந்தான்.**

*தன் தந்தையின் துணைவனான சுமந்திரன் தன்முன்னே நின்ற அந்தக் குகனது இயல்பைச் சொல்வதற்கு முன்பாகவே மகிழ்ச்சி அடைகின்ற மாசற்ற மனத்தான் பரதன், மன்னனான இராமனை முன்னமே ஏற்றுக் கொண்ட மனத்துக்கு இனிய தோழன் என்றால் எனக்குத் தமயனே ஆவான். ஆகையால் யானே சென்று அவனைக் காண்பேன்.*

## பரதனது தோற்றம் கண்ட குகனின் நிலையும் செயலும்

28. **என்றெழுந்து தம்பி யொடு மெழுகின்ற காதலொடும்**
**குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக் கரை குறுகி**
**நின்றவனைநோக்கினான் திருமேனி நிலை யுணர்ந்தான்**
**துன்றுகரு நறுங்குஞ்சி யெயினர்கோன் றுண்ணென்றான்.**

*என்று கூறி எழுந்து தன் தம்பி சத்துருக்கனோடும் (குகனைக்) காண வேண்டுமென்ற விருப்பத்தோடும், ஒரு மலை எழுந்து சென்றது என்று சொல்லும் படியாக, குளிர்ந்த நீரோடும் கங்கையாற்றின் கரையை அடைந்து நின்ற பரதனை நெருக்கமான கரிய தலைமயிரை உடைய வேடர் தலைவன் பார்த்தான். (வாடிய பரதனுடைய) நிலையை உணர்ந்தான் அதிர்ச்சியடைந்தான்.*

29. **வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை**
**நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்**
**கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்**
**விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.**

*மரவுரி தரித்தவனும், அழுக்குப்படிந்த உடம்பை உடையவனும் நல்ல ஒளியில்லாத மதிபோன்றவனும் பொலிவிழந்த முகத்தை உடையவனும் கல்லும் கரையும்படி மிகுந்த*

*துயரத்தை உடையவனும் ஆன பரதனைக் கண்டான் குகன். அவன்பிடித்திருந்த வில் கையினின்றும் நழுவி விழ. விம்மி, செயலற்று நின்றான்.*

30. **நம்பியுமென் னாயகனை யொக்கின்றா னயனின்றான்**
**தம்பியையு மொக்கின்றான் றவவேடந்**
**தலைநின்றான்**
**துன்பமொரு முடிவில்லை திசை நோக்கித்**
**தொழுகின்றான்**
**எம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ**
**பிழைப்பென்றான்.**

*(இந்த) நம்பியும் என் தலைவனான இராமனை ஒத்திருக்கிறான். பக்கத்திலிருப்பவனும் (சத்துருக்கன்) இராமனின் தம்பி இலக்குவனை ஒத்திருக்கிறான். அன்றியும் (பரதன்) தவவேடம் தாங்கியுள்ளான். அவனுடைய துன்பம் எல்லையற்றதாக உள்ளது. (இராமன் சென்ற) திசை நோக்கித் தொழுகின்றான். எம் தலைவனான இராமனுக்குப்பின் பிறந்தவர்கள் தவறு செய்வார்களோ? (செய்ய மாட்டார்கள்)*

31. **உண்டிடுக்க ணொன்றுடையா னுலையாத**
**வன்புடையான்**
**கொண்டதவ வேடமே கொண்டிருந்தான்**
**குறிப்பெல்லாம்**
**கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காமின்**
**கணெறியென்னாத்**
**தண்டுறையோர் நாவாயி லொருதனியே**
**தான்வந்தான்.**

*(ஏதோ) துன்பம் உண்டாகியிருக்கிறது. குறையாத அன்புடையவன். இராமன் கொண்டுள்ள தவக் கோலத்தையே கொண்டிருக்கிறான். அவன் மனக் கருத்தை எல்லாம் கண்டறிந்து வருவேன். பாதையைப் பத்திரமாகக் காவல்புரியுங்கள் என்று கூறி, குளிர்ந்த கங்கை நீர்த் துறையிலிருந்து ஒரு நாவாயில் தனியே வந்தான்.*

## பரதன் குகனைப் பணிதல்

32. வந்தெதிரே தொழுதானை வணங்கினான் மலரிருந்த
அந்தணனும் தனைவணங்கு மவனுமவ
னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத் தழுவினான் றகவுடையார்
சிந்தையிலுஞ் சென்னியிலும் வீற்றிருக்
குஞ்சீர்த்தியான்.

*தன் எதிரில் வந்து தொழுத அவனை (பரதனை) குகனும் தொழுதான். தாமரை மலரில் தங்கியிருந்த பிரமனும் தன்னை வணங்கத் தக்க அவனும் (பரதனும்) குகனின் அடிகளில் வீழ்ந்து வணங்கினான். பெருந்தன்மை உடையவர்கள் மனத்திலும் சிந்தனையிலும் வீற்றிருக்கும் புகழுடைய குகன் தந்தையைக் காட்டிலும் மகிழ்ச்சி பொங்க, பரதனை அரவணைத்துக் கொண்டான்.*

33. தழுவின புளிஞர் வேந்தன் றாமரைச் செங்க ணானை
எழுவினு முயர்ந்த தோளா யெய்திய
தென்னை யென்ன
முழுதுல களித்த தந்தை முந்தையோர்
முறையினின்றும்
வழுவினதனை நீக்க மன்னனைக் கொணர்வா
னென்றான்.

அவ்வாறு தழுவிக் கொண்ட வேட அரசனான குகன் தாமரை போலும் சிவந்த கண்களையுடைய பரதனை நோக்கி, கணைய மரத்தினும் திண்மையான தோள்களை உடையவனே! (நீ இங்கு) வந்தகாரியம் யாது என்று வினவ - உலகம் முழுவதையும் காத்த எங்கள் தந்தை முன்னோர் பின்பற்றிய முறையிலிருந்து தவறிவிட்டான். அந்த முறைகேட்டை நீக்க ஆட்சிக்குரிய இராமனை அழைக்க வந்துள்ளேன் என்றான்.

## பரதன் கூறியதைக் கேட்ட குகனது மகிழ்ச்சி

34. கேட்டனன் கிராதர்வேந்தன் கிளர்ந்தெழு
முயிர்ப்பனாகி
மீட்டுமன்ன தனில்வீழ்ந்தான் விம்மினனுவகை
வீங்கத்

**தீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவிற்**
**பூட்டிய கையன் பொய்யி லுள்ளத்தன் புகல லுற்றான்**

*பரதன் கூறியது கேட்ட வேடர்களின் வேந்தன் பொங்கி எழும் பெருமூச்செறிந்து, மறுபடியும் தரையில் வீழ்ந்து வணங்கி உவகை பொங்க விம்மினான். ஓவியத்தில் தீட்ட ஒண்ணாத உருவ அழகுடைய பரதனின் சிவந்த அடிகளான தாமரைப் பூவைப் பற்றிய கைகளோடு பொய்மை அறியாத மனத்தோடு புகலானான்.*

35. **தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத்**
**தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்துத் தேக்கிப்**
**போயினை யென்ற போது புகழினோய் தன்மை கண்டால்**
**ஆயிர மிராமர் நின்கே ழாவரோ தெரியி னம்மா.**

*சிறந்த புகழை உடையவனே, தாயின் சொல்லைக் கேட்டுத் தந்தை உனக்குக் கொடுத்த நாட்டை (மூத்தவன் இருக்க இளையவன் ஆளுதல்) தீவினை என்று எண்ணிவிடுத்து, கவலையை முகத்தில் தேக்கி (அண்ணனை அழைத்து வரக்) காட்டுக்குப் போனாய் உன் இயல்பை எண்ணிப் பார்த்தால் ஆயிரம் இராமர்கள் உனக்கு ஒப்பாவார்களோ? (நீ ஆயிரம் ராமர்களுக்கு ஒப்பானவன்)*

36. **என்புகழ் கின்ற தேழை யெயினனே னிரவி யென்பான்**
**தன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு மாபோல்**
**மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழை யெல்லாம்**
**உன்புகழாக்கிக் கொண்டா யுயர்குணத் துரவுத் தோளாய்**

*உயர்குணங்களை உடைய வலியதோள்களை உடையவனே! அறிவற்ற வேடனான நான் (உன்னை) எப்படிப் புகழ்வது? சூரியன் என்பவன் புகழ்தற்குரிய தன் ஒளிக் கதிர்களால் பிற ஒளி எல்லாம் தன்னுள் அடக்கிக் கொள்வது போல் மன்னர்களின்*

புகழ்ச்சிக்குரிய பெருமைகளையும் உங்கள் மரபிலுள்ளவர் பெருமைகளையும் உன்புகழ் ஆக்கிக் கொண்டாய்.

37. **எனவிவை யன்ன மாற்ற மியைவன பலவுங் கூறிப்
புனைகழற் புலவுவேற்ப் புளிஞர்கோன் பொருவில் காதல்
அனையவற் கமைவிற் செய்தா னாரவற் கன்பிலாதார்
நினைவருங் குணங்கொடன்றோ விராமன்மே லிமிர்ந்த காதல்.**

என்று இதுபோன்ற பொருத்தமான அன்புமொழி பல பகன்று வீரக் கழலணிந்த புலால் மணங் கமழும் வேல் பிடித்த கையையுடைய வேடர் தலைவன் ஒப்பில்லாத அன்புடையவனுக்குப் மனமார்ந்த அன்பு காட்டினான். அவன் யாரிடம் அன்பு செலுத்தவில்லை? நினைத்துப் பார்க்க முடியாத நற்குணங்களால் அன்றோ இராமனிடம் பேரன்பு கொண்டான்?

## பரதன் குகனை வினவுதல்

38. **அவ்வழி யவனை நோக்கி யருடரு வாரி யன்ன
செவ்வழி யுள்ளத் தண்ணல் தென்றிசைச் செங்கை கூப்பி
எவ்வழியுறைந்தா னம்மு னென்றலு மெயினர் வேந்தன்
இவ்வழி வீரயானே காட்டுவெ னெழுக வென்றான்.**

அப்போது அன்போடு குகனைப் பார்த்து, கருணை தரும் கடலைப் போன்ற நேர்மையான சிந்தனையுடைய பரதன், இராமன் சென்ற தென் திசை நோக்கிக் கைகூப்பி நம்முன்னவன் (அண்ணன்) எந்த இடத்தில் தங்கியிருந்தான் என்று கேட்டான். எயினர்கோன், வீரனே, நான் காட்டுவேன் வருக என்றான்.

39. **காரெனக் கடிது சென்றான் கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் பருவரற் பரவைபுக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணான்**

*மேகம் போல் விரைந்து சென்று, நீண்ட வில்லேந்திய பெரிய கைகளை உடைய இராமன் படுத்திருந்த, கற்களுக்கிடையில் பாப்பிய புல்லாலான, படுக்கையைக் கண்டான். துடித்து மண்மேல் வீழ்ந்து, துன்பக் கடலுள் மூழ்கி ஒழுகும் முத்துப் போன்ற கண்ணீரால் மண்ணை நீராட்டினான்.*

**40. இயன்றதென் பொருட்டி னாலிவ் விடருனக் கென்ற போதும்**

**அயின்றனை கிழங்குங் காயு மமுதென வரிய புல்லில்**

**துயின்றனை யெனவு மாவி துறந்திலென் சுடருங் காசு**

**குயின்றுயர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் கொள்வென்யானே.**

*என் பொருட்டு (உனக்கு) இத்தகைய துன்பம் ஏற்பட்டது என்பதை அறிந்த போதும், கிழங்குகளையும் காய்களையும் உணவாக உண்டாய், புல்லில் படுத்து உறங்கினாய் என்று அறிந்த போதும் என் உயிரை நீக்கிக் கொள்ளவில்லை. ஒளிவீசும் மணிகள் பதிக்கப் பெற்ற மகுடம் சூடி ஆளும் செல்வத்தையும் நான் மேற் கொள்வேன்.*

**41. தூண்டர நிவந்ததோளான் பின்னருஞ் சொல்லுவானந்**

**நீண்டவன் றுயின்ற சூழ லிதுவெனி னிமிர்ந்த நேயம்**

**பூண்டவன் றொடர்ந்து பின்னே போந்தவன் பொழுது நீத்த**

**தியாண்டென வினிது கேட்டா னெயினர் கோனிதனைச் சொன்னான்.**

*தூண்போன்ற பெரிய தோள்களை உடைய பரதன் மேலும் சொல்கிறான். அந்த நெடியவனான இராமன் உறங்கிய இடம் இதுவெனில் மிகுந்த அன்பு பூண்டவனும் தொடர்ந்து பின்வந்தவனுமான இலக்குவன் பொழுதைக் கழித்தது எந்த இடம்? என்று வினவினான். எயினர் கோன் அதைச் சொன்னான்.*

## குகன் கூறிய விடை

42. அல்லையாண் டமைந்த மேனி யழகனு
மவளுந்துஞ்ச
வில்லையூன் றியகை யோடும் வெய்துயிர்ப் போடும்
வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய் கண்கணீர் சோரக்
கங்குல்
எல்லைகாண் பளவு நின்ற விமைப்பில னயன
மென்றான்

*கல்போன்ற வலிமை படைத்த தோள்களை உடையனே! இருளையும் வென்று அமைந்த மேனியை உடைய அழகனான இராமனும் அவளும் (சீதையும்) உறங்க, வீரனான இலக்குவன் வில்லை ஊன்றிப் பிடித்த கையோடு பெருமூச் செறிந்தவாறு கண்ணீர் சோர இரவு முழுதும் நின்று கொண்டிருந்தான் என்றான்.*

## பரதன் இலக்குவனைப் பாராட்டி வருந்துதல்

43. என்பத்தைக்கேட்ட மைந்த னிராமனுக்
கிளையாரென்று
முன்பொத்த தோற்றத் தேமில் யானென்று
முடிவிலாத
துன்பத்துக் கேது வானே னவனது துடைக்க
நின்றான்
அன்பத்துக் கெல்லை யுண்டோ வழகிதென்
னடிமை யென்றான்.

*(குகன் இவ்வாறு) கூறக் கேட்ட பரதன், முன்பு இராமனுக்கு இளையவர்கள் என்று ஒத்த பிறப்புடைய எங்களுள் நான் என்றும் முடிவில்லாத துன்பத்துக்குக் காரணமானேன். அவன் (இலக்குவன்) அத்துன்பத்தைத் துடைக்க நின்றான். அவனுடைய அன்புக்கு எல்லை உண்டோ? அவனுக்கு (இராமனுக்கு) நான் செய்யும் தொண்டு அழகானது! என்றான்.*

44. அவ்விடை யன்னா ரானு மன்றரும் பொடியின் வைகித்
தெவ்விடை தர நின் றார்க்குஞ் செறிகழற் புளிஞர் கோமான்
இவ்விடைக் கங்கை யாற்றி னேற்றினை யாயினெம்மை
வெவ்விடர்க் கடலின் றேற்றி வேந்தன்பால் விடுத்ததென்றான்.

அந்த இடத்தில் சிறந்தவனான பரதன் அன்று அவ்விடத்தே, அரிய புழுதியில் படுத்திருந்து, பகைவர் புறமுதுகிட்டோடும்படியாக ஆரவாரம் செய்யும் வீரக் கழலணிந்த புளிஞர்கோமானே! இப்போது எங்களைப் படகேற்றி கங்கைப்பாற்றைக் கடக்க உதவினால், எம்மைக் கொடிய துன்பக் கடலிலிருந்து கரையேற்றி மன்னனான இராமனிடம் சேர்த்தது போலாகுமென்றான்.

## குகன் கட்டளையால் நாவாய்கள் வருதல்

45. நன்றெனப் புளிஞர் வேந்த னண்ணினன் றமரை நாவாய்
சென்றினித் தருதி ரென்ன வந்தன சிவன்சேர் வெள்ளிக்
குன்றெனக் குனிக்கு மம்பொற் குவடெனக் குபேரன் மானம்
ஒன்றென னாணிப் பல்வேறுருவுகொண்டனைய வான.

வேடர் தலைவன், நல்லது என்று கூறி தன் வேடர்களை அணுகி இனி நீங்கள் சென்று படகுகளைக் கொணர்க என்று கட்டளையிட்டான். சிவபெருமான் தங்கியிருக்கும் வெள்ளி மலையும் குபேரனது புட்பக விமானமும் (இவற்றுக்கு) ஈடாக முடியாதெனப் படகுகள் நாணிப் பல்வேறு வடிவங்களில் வந்தன.

## நாவாய்களின் வருணனை

46. நங்கையர் நடையி னன்ன நாணுறு செலவி னாவாய்
கங்கையுமிடமில் லாமை மிடைந்தன கலந்த வெங்கும்
அங்கொடிங் கிழித்தியேற்று மமைதியா லமரர் வையத்
திங்கொடங் கிழித்தியேற்று மிருவினை யென்ன லான.

*அன்னப் பறவைகளும் நாணும் படியாக நங்கையர் நடப்பதைப் போல் செல்லும் நாவாய்கள். கங்கையாற்றின் மேற்பரப்பு, போதாதவாறு, எல்லா இடங்களிலும் நெருங்கி இக்கரையிலும் அக்கரையிலும் உள்ளவர்களை ஏற்றி இறக்கும் தன்மையால் தேவலோகத்திலுள்ளவர்களைத் தேவலோகத் துக்கும் இவ்வுலகத்துக்கும் இறக்கி ஏற்றும் (புண்ணிய பாவமென்னும்) இருவினைகள் என்று சொல்லுமாறு இருந்தன.*

47. வந்தன வரம்பி னாவாய் வரிசிலைக் குரிசின் மைந்த
சிந்தனை யாவ தென்று சிருங்கிபே ரியர்கோன் செப்பச்
சுந்தர வரிவி லானுஞ் சுமந்திரன் றன்னை நோக்கி
எந்தையித் தானை தன்னை யேற்றுதி விரைவினென்றான்.

*கட்டமைந்த வில் வீரனே, வரம்பில்லாத நாவாய்கள் வந்தன. நீ என்ன நினைக்கிறாய் என்று சிருங்கி பேரப்புரத்துத் தலைவன் கேட்க, அழகிய வில்லையுடைய பரதனும் சுமந்திரனைப் பார்த்து எம் தந்தையே! இச்சேனையை விரைவில் ஏற்றுக என்றான்.*

48. குரிசில தேவ லாலக் குரகத் தேர்வ லானும்
வரிசையின் வழாமை நோக்கி மரபுளி வகையினேற்றக்
கரிபரி யிரதங் காலாள் கணக்கறு கரையில் வேலை
எரிமணி திரையின் வீசுங் கங்கையா றேறிற் றன்றே.

ஆண்களில் சிறந்த பரதனது கட்டளைப்படி குதிரை பூட்டப்பட்ட தேர் செலுத்துவதில் வல்லவனான சுமந்திரனும் படகில் ஏற்ற வரிசை தவறாமல் முறைப்படி கணக்கற்ற யானை, குதிரை, தேர், காலாட்கள் ஆகிய சேனைக் கடல், ஒளிவீசும் மணிகளை அலைகளால் அள்ளி வீசுகின்ற, கங்கையாற்றைக் கடந்தன.

## யானைகள் நீந்திச் செல்லுதல்

49. இடிபடு முழக்கம் பொங்க வினமழை மகர நீரை
முடிவுற முகப்ப வூழி யிறுதியின் மொய்ப்ப போலக்
கொடியொடு வங்கம் வேலைக் கூம்பொடு படர்வபோல
நெடியகை யெடுத்து நீட்டி நீந்தின நெடுங்கை வேழம்.

ஊழியிறுதிக் காலத்தில் முகிற் கூட்டம் கடல் நீரை முற்றும் பருகி மிகுந்த இடி முழக்கங்களோடு மூடிமறைத்துக் கொண்டதைப் போல, கொடியும் பாய்மரங்களும் கட்டப்பட்ட கப்பல்கள் கடலில் செல்வனபோல, துதிக்கைகளை நீட்டிக் கொண்டு யானைகள் நீந்தின.

50. சங்கமு மகர மீனுந் தரளமு மணியுந் தள்ளி
வங்க நீர்க்க கடலும் வந்து தன்வழிப் படர மானப்
பொங்குவெங் களிறு நூக்கக் கரையொரீஇப் போயிற்றம்மா
கங்கையு மிராமற் காணுங் காதலுற் றென்ன மாதோ.

பெருந் திரளான யானைகள் காலால் உந்தித் தள்ளுவதால் சங்கு, மகரமீன், முத்துக்கள், மணிகள் ஆகியவற்றை அடித்துக் கொண்டு வரும் கங்கை நீரும், மரக்கலங்கள்செல்லும் கடலும் தன்னிடத்தில் வந்து பாயுமாறு, இராமனைக் காணும் ஆசையில் கரைகடந்து ஓடிற்று.

51. பாங்கினுத் தரிய மானப் படர்திரை தவழப் பாரின்
வீங்குநீ ரமுவந் தன்னுள் வீழ்மதக் கலுழி வெள்ளத்

தோங்கல்க டலைக டோன்ற வொளித்தவ னுயர்ந்த
கும்பம்
பூங்குழற் கங்கை நங்கை முலையெனப்
பொலிந்தமாதோ.

*கரைகடந்து ஓடும் கங்கை நீரின் ஆழமான பகுதிகளில் விரும்பி நீந்தி மதநீரைக் கழிக்கும் யானைகள் தலைகள் மட்டும் மேலே தெரியும்படியாக உடலை மறைத்தலால், அங்கு உயர்ந்து தோன்றிய கும்பம் போன்ற மத்தகங்களின் மேல் அலைகள் தவழ்வது பூச்சூடிய கூந்தலை உடைய மங்கையாகிய கங்கையின் முலைகளைப் போல விளங்கின.*

52. கொடிஞ்சொடு தட்டு மச்சு மாழியும் கோத்த
மொட்டும்
நெடுஞ்சுவர்க் கொடியும் யாவு நெறிவரு
முறையினீக்கி
விடுஞ்சுவற் புரவி யோடும் வேறுவே றேற்றிச் சென்ற
மடிஞ்சபி னுயிர்கள் கூட்டும் வினையென
வயிரத்தேர்கள்.

*உறுதியான தேர்கள் கொடிஞ்சியுடன், தட்டு, அச்சு, சக்கரம், கோத்த மொட்டு, நீண்ட சுவர்களில் கட்டப்பட்ட கொடி போன்ற பல உறுப்புக்களை முறையாக நீக்கி வளர்ந்த பிடறி மயிரை உடைய குதிரைகளுடன், இறந்தபின் உடம்போடு சேர்க்கும் வினைகளைப் போல் வெவ்வேறு கலன்களில் ஏற்றப்பட்டன.*

53. நாலிரண் டாய கோடி நவையில நாவாய் மீதாச்
சேறிரண் டனைய வாய கதியொடு நிமிரச் சென்ற
பாறிரண்ட னைய மெய்ய பயந்திரண் டனைய நெஞ்ச
காறிரண் டனைய கால கடுநடைக் கலினப் பாய்மா.

*பால் திரண்டு வடிவெடுத்ததைப் போன்ற உடம்பினை உடையனவும் அச்சம் திரண்டாற் போன்ற மனம் உடையனவும் காற்றுத் திரண்டாற் போன்ற கால்கள்களை உடையனவுமாகிய விரைந்து செல்லும் குதிரைகள் தம்மீது ஏற்றப்பட்ட எட்டு கோடி அளவான குறைவில்லாத ஓடங்கள் சேல்மீன்கள் திரண்டு செல்வதைப் போல் சென்றன.*

## பெண்கள் படகிற் செல்லுதல்

54. ஊடுற நெருக்கி யோடத் தொருவர்
முன்னொருவர்கிட்டிச்
சூடகத் தளிர்க்கை மாதர் தழுவினர்துவன்றித் தோன்ற
பாடியல் களிமால் யானைப் பந்தியங் கடையிற்
குத்தும்
கோடுகள் மிடைந்த வென்ன மிடைந்தன குவவுக்
கொங்கை.

*வளையல்களணிந்த தளிர்போன்ற கைகளை உடைய பெண்கள் ஓடத்தில் ஒருவர்முன் ஒருவர் நெருங்கி நிற்பது, பெருமை பொருந்திய நல்ல இலக்கணம் அமைந்த யானைகளின், அழகிய நுனியால் குத்த வல்ல கொம்புகள் நெருங்கினாற் போல் திரண்ட கொள்கைகள் நெருங்கின.*

55. பொலங்குழை மகளிர் நாவாய் போக்கினொ னொன்று
தாக்க
மலங்கின ரிரண்டு பாலு மறுகினர் வெருவி நோக்க
அலங்குநீர் வெள்ளந் தள்ளி யழிதர வங்குமிங்கும்
கலங்கின வெருவிப் பாயுங் கயற்குல நிகர்த்த கண்கள்.

*படகுகள் போகும் போது ஒன்றோடு ஒன்று மோதுவதால், பொன்னாலான குண்டலங்களளோடு அஞ்சி மனங்கலங்கி இருபக்கங்களிலும் மாறிமாறிப் பார்க்கும் அவர்களின் கண்கள், அசையும் வெள்ளத்தால் அஞ்சி, துள்ளிப்பாயும் கயல் மீன் கூட்டத்தை ஒத்திருந்தன.*

56. இயல்வுறு செலவி னாவா யிருகையு மெயினர்
தூண்டத்
துயல்வரு துடுப்பு வீசுந் துவலைகண் மகளிர் மென்றூ
சுயல்வுறு பரவை யல்கு லொளிபெறத் துளிப்புவுள்ளத்
தயர்வுறு மதுகை மைந்தர்க் கயாவுயிர்ப் பளித்த
தன்றே.

ஓடங்களை விரைந்து செலுத்துவதற்காக இரு பக்கங்களிலும் வேடர்கள் முன்னும் பின்னுமாக அசைக்கும் துடுப்புக்கள் வீசித் தெளித்த நீர்த்துளிகள், பெண்கள் உடுத்தியுள்ள மெல்லிய ஆடையில் பட்டு பெரிய அல்குல் தெரியும்படியாக நனைக்கவும். அது கண்ட, சோர்வுற்றிருந்த வலிமை வாய்ந்த வீரர்களக்குப் புத்துயிர்ப்பு உண்டாயிற்று.

57. இக்கரை யிரைத்த சேனை யெறி கடன் முகந்த வேகி
அக்கரை யடைய வீசி வறியன வணுகு நாவாய்
புக்கலை யாழி நன்னீர் பொறுத்தன பொழிந்து போக்கி
அக்கண முவரி மீளு மகன்மழை நிகர்த்த வம்மா.

இந்தக் கரையில் ஆரவாரம் செய்த சேனையாகிய கடலை வாரிக் கொண்டு போய் அக்கரையில் இறக்கிவிட்டு ஏதுமின்றி (காலியாக) திரும்பி வரும் ஓடங்கள் அலை வீசும் கடலில் புகுந்து பருகித் தாங்கிய நல்ல நீரை மழையாகப் பொழிந்து தீர்த்து விட்டு அக்கணமே கடலுக்குத் திரும்பிச் செல்லும் பெரிய மேகங்களை ஒத்திருந்தன.

58. அகிலிடு தூப மன்ன வாய்மயிற் பீலி யார்த்த
முகிழுடை முரண்மாத் தண்டு கூம்பென முகிலின் வண்ணத்
துகிலொடு தொடுத்த செம்பொற் றட்டிடைத் தொடுத்த முத்தின்
நகுகொடி நெடிய பாயா நவ்வெனச் சென்ற நாவாய்.

அகில் கட்டையை எரித்து எழுப்பும் புகையைப் போல், அழகிய மயிற்பீலி கட்டப்பெற்ற குமிழை உடைய வலிய, பெரிய தண்டு பாய்மரமாகவும் வெண்துகில் போன்ற சீலை கட்டப்பட்டு நல்ல பொன்தகட்டில் தொடுக்கப்பட்ட ஒளிவீசும் முத்துக்களோடு விளங்கும் கொடிகளைப் பாய்மரமாகவும் கொண்ட படகுகள் கப்பலைப்போல் சென்றன.

59. ஆனனங் கமல மன்ன மின்னன வமுதச் செவ்வாய்த்
தேனனை குழலா ரேறு மம்பிகள் சிதறு முத்தம்

மீனென விரிந்த கங்கை விண்ணெனப் பண்ணை
முற்றி

வானவர் மகளி ரூரு மானமே நிகர்த்த மாதோ.

*தாமரை மலரைப் போன்ற முகமும் அமுதூறும் சிவந்த வாயும் உடைய மின்னற் கொடி போன்ற தேன் சொட்டும் பூச்சூடிய மகளிர் ஏறிச் சென்ற ஓடங்கள் கங்கையின் நீர்ப் பரப்பு ஆகாயம் போலவும் சிதறும்முத்துக்கள் விண்மீன்கள் போலவும் (தோன்ற) தேவ மங்கையர் நீர் விளையாடிவிட்டு ஏறிச் செல்லும் விமானங்களைப் போலுள்ளன.*

60. துளிபடத் துழாவு திண்கோற் றுடுப்பிருகாலிற்
றோன்ற

நளிர்புனற் கங்கையாற்றி னண்டெனச் செல்லு நாவாய்

களியுடை மஞ்ஞை யன்ன கனங்குழைக்
கயற்கண்மாதர்

ஒளிரடிக் கமலந் தீண்ட வுயிர்படைத் தனவே யொத்த.

*நீர்த் துளிகள் சிதறும்படித் துழாவுகின்ற வலிய கைப்பிடி கோலை உடைய துடுப்புக்கள் இருபக்கங்களிலும் உள்ள கால்களைப் போல் தோன்றுமாறு குளிர்ந்த நீரோடும் கங்கையாற்றில் நண்டுகளைப் போல் செல்கின்ற ஓடங்கள், களிப்புடைய மயில்களைப் போல் கனமான குண்டலங்களையும் கயல் போன்ற கண்களையும் உடைய பெண்களின் ஒளிவீசும் அடித்தாமரைகள் தீண்டியதால் உயிர் பெற்றன.*

61. மையறுவிசும்பின் மண்ணின் மற்றுமோருலகின்
முற்றும்

மெய்வினை தவமே யன்றிவேறு மொன்றுளதோ
கீழோர்

செய்வினை நாவா யேறித் தீண்டலர் மனத்திற்
செல்லும்

மொய்விசும் போட மாகத் தேவரின் முனிவர்
போனார்.

*முனிவர்கள், கீழ் மக்கள் தொழில் செய்வதற்குரிய ஓடங்களைத் தொட்டு ஏறாமல், நினைத்த அளவில் செல்லத் தக்க பெரிய வானத்தையே ஓடமாகக் கொண்டு தேவர்களைப் போல் சென்றார்கள். குற்றமற்ற விண்ணுலகிலும், மண்ணுலகிலும், வேறு உலகங்களிலும் முற்றும் உண்மையான செயல் தவமேயல்லால் வேறு ஏதோனும் உள்ளதோ?*

62. அறுபதி னாயிர மக்கு ரோணி யென்
றிறுதிசெய் சேனையு மெல்லை தீர்நகர்
மறுவறு மைந்தரு மகளிர் வெள்ளமும்
செறிதிரைக் கங்கையின் கிடக்கச் சென்றவே.

*அறுபதினாயிரம் அக்குரோணியென்று கணக்கிடப்பட்ட சேனையும் பெரிய அயோத்தி நகரில் வாழும் குறைபாடற்ற ஆடவரும் மகளிர் கூட்டமும் அலைகள் மிகுந்த கங்கையாறு பின்னே தங்குமாறு சென்றன.*

## பரதன் படகு ஏறுதல்

63. சுழித்து நீர் வருதுறை யாற்றைச் சூழ்படை
கவித்து நீங்கிய தெனக்கள்ள வாசையை
அழித்துவே றவனிபண் டாண்ட வேந்தரை
இழித்துமே லேறினான் றானு மேறினான்.

*சூழ்ந்து வந்த சேனை நீர் சுழித்தோடும் துறைகளை உடைய கங்கையாற்றைக் கடந்ததென அறிந்து, கள்ளத்தனமான ஆசையை ஒழித்து முன்னே உலகையாண்ட வேந்தர்களைப் புகழால் கீழ்ப்படுத்தி மேம்பட்டவனான பரதன் தானும் ஏறினான்.*

64. தன்னனை தம்பியுந் தாயர் மூவரும்
சொன்னதேர் வலவனுந்தூய தோழனும்
துன்னின ரேறலுந் துழாத்து டுப்பெனும்
நன்னயக் காலினா னடத்தன் மேயினான்.

*தன்னையொத்த தம்பி சத்துருக்கனும் தாய்மார்கள் (கோசலை, கைகேயி, சுமித்திரை) மூவரும் சிறப்பித்துச்*

சொல்லப்படும் தேர்ப்பாகனும் (சுமத்திரன்) தூய்மையான தோழனான குகனும் ஏறியவுடன் துழாவும் துடுப்பு என்னும் அழகிய கால்களினால் நடக்கத் தொடங்கினான். (இப்பாடல் சில பதிப்புக்களில் காணப்படவில்லை. வை.மு.கோ பதிப்பில் இடம் பெறுகிறது.

## கோசலையைப் பரதன் குகனுக்கு அறிமுகப்படுத்துதல்

65. **சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற கோசலையைத்**
**தொழுது நோக்கிக்**
**கொற்றத்தார்க் குருசிலிவ ராரென்று குகன்வினவக்**
**கோக்கள் வைகும்**
**முற்றத்தான் முதற்றேவி மூன்றுலகு மீன்றானை**
**முன்னீன் றானைப்**
**பெற்றத்தாற் பெறுஞ்செல்வம் யான்பிறந்த லாற்றுறந்த**
**பெரியா ளென்றான்.**

சுற்றத்தாரும் தேவர்களும் தொழும்படியாக நின்ற கோசலையைத் தொழுது நோக்கி வெற்றி மாலையணிந்த வீரனே! இவர் யார் என்று குகன் வினவினான். பரதன், சிற்றரசர்கள் பலர் (காண்பதற்குக் காலங்கருதி) காத்திருக்கும் முற்றத்தை உடைய தசரதனின் மூத்த பட்டத்தரசி. மூவுலகங்களையும் படைத்தவனை (பிரமனை) முதலில் படைத்த திருமாலின் அவதாரமான இராமனைப் பெற்றெடுத்ததால் அடைதற்குரிய ஆட்சிச் செல்வத்தை, நான் பிறந்ததால், இழந்த பெருமைக்குரியவள் என்றான்.

## வணங்கிய குகனைக் கோசலைக்கு அறிமுகப்படுத்துதல்

66. **என்றலுமே யடியின் மிசை நெடிதுவிழுந் தழுவானை**
**யிவனா ரென்று**
**கன்றுபிரி காராவின் றுயருடைய கொடிவினவக்**
**கழற்கால் மைந்தன்**

இன்றுணைவ னிராகவனுக் கிலக்குவற்குமிளையவற்கு
மெனக்க மூத்தான்
குன்றனைய திருநெடுந் தோட் குகனென்பா னிந்நின்ற
குரிசி லென்றான்.

பரதன் இவ்வாறு சொன்ன அளவில் அவன் பாதங்களில் நெடிது வீழ்ந்து அழுகின்றவனான குகனைக் காட்டி இவன் யார் என்று கன்றைப் பிரிந்த காராம் பசுவினைப் போல் துயருடைய கொடி போன்ற கோசலை வினவ. கழலணிந்த காலையுடைய வீரனான பரதன், இங்கு நிற்கும் வீரன் இராமனுக்கு இனிய துணைவன். இலக்குவனுக்கும் எனக்கும் சத்துருக்கனுக்கும் மூத்தவன். (தமையனாம் தகுதியுடையவன்) குன்றனைய அழகிய பெரிய தோள்களை உடைய குகனென்னும் பெயருடைய வீரன் என்றான்.

## கோசலை மகிழ்ந்து வாழ்த்துதல்

67. நைவீர லீர்மைந்தீ ரினித்துயரா னாடிறந்து
காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற் றாமன்றே
விலங்கற் றிண்டோட்
கைவீரக் களிறனைய காளையிவன் றன்னோடு
கலந்து நீங்கள்
ஐவீருமொருவீரா யகலிடத்தை நெடுங்கால
மளித்தி ரென்றாள்.

(அதுகேட்ட கோசலை அவர்களைப் பார்த்து) மைந்தர்களே! வருந்தாதீர். மெய்யான வீரர்களான இராம இலக்குவர் நாட்டை விட்டுக் காட்டுக்கு வந்ததும் நல்லதாயிற்று. (இவனைத் தோழனாகப் பெற்றதால்) இனி, மலை போன்ற வலிய தோள்களையுடைய துதிக்கையால் வீரம் விளைவிக்கும் களிறு போன்ற இவ்வீரனோடு சேர்ந்து நீங்கள் ஐந்து பேரும் ஒன்று கூடி பரந்த உலகத்தைப் பல காலம் ஆள்வீராக என்றாள்.

## சுமித்திரையை அறிமுகப்படுத்துதல்

68. அறந்தானே யென்கின்ற வயனின்றா டனை நோக்கி
 யைய வன்பின்
நிறைந்தாளை யுரை யென்ன நெறி திறம்பாத்
 தன்மெய்யை
 நிற்ப தாக்கி
இறந்தான்ற னிளந்தேவி யாவர்க்குந் தொழுகுலமா
 மிராமன் பின்பு
பிறந்தானு முளனென்னப் பிரியாதான் றனைப் பயந்த
 பெரியா ளென்றான்.

*தரும தேவதையே என்று சொல்லத்தக்கவாறு பக்கத்தில் நின்ற சுமித்திரையைப் பார்த்து அன்பினால் நிறைந்தவளான இவள் யாரெனச் சொல்வாய் என்றான். முறை தவறாமல் தன் உண்மையை நிலை நிறுத்தி இறந்துபோன தசரதனுடைய இளைய பட்டத்தரசி யாவராலும் தொழத் தகுந்த இராமனுக்குப் பின் பிறந்த ஒருவனும் இருக்கிறான் என்று சொல்லும் வண்ணம் இராமனைவிட்டு, நீங்காத இலக்குவனைப் பெற்ற பெருமையுடையவள் என்றான்.*

## கைகேயியை யாரென்று குகன் கேட்கப் பரதன் கூறுதல்

69. சுடுமயா னத்திடைதன் றுணையேகத்
 தோன்றறுயர்க்க கடலினேகக்
கடுமையார் கானகத்துக் கருணையார் கலியேகக்
 கழற்கான் மாயன்
நெடுமையா லன்றளந்த வுலகெல்லாந் தன்மனத்தே
 நினைந்து செய்யும்
கொடுமையாலளந்தாளை யாரிவரென் றுரையென்னக்
 குருசில் [illegible]றும்.

*தன் கணவன் சுடுகாடு செல்லவும் தன் வயிற்றில் பிறந்த மகன் துன்பக் கடலுள் மூழ்கவும், கருணைக் கடலான இராமன்*

காட்டுக்குச் செல்லவும் கழலணிந்த கால்களை உடைய திருமால் பேருருவம் எடுத்து அளந்த உலகங்கள் எல்லாவற்றையும், தன் மனத்தில் நினைந்து (ஆசைப்பட்டு) செய்த கொடுஞ் செயலால் அளந்தவளான கைகேயியை இவள் யார் என்று கேட்டான்.

70. படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ்
செவிலியைத்தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கு முயிர் பாரங்
குறைந்து தேய
உடரெலா முயிரிழந்த வெனத்தோன்று முலகத்தே
யொருத்தி யன்றே
இடரிலா முகத்தாளை யுணர்ந்திலையோ விந்நின்றா
ளென்னை யீன்றாள்.

துன்பங்களை எல்லாம் படைத்தவள், பழி வளர்க்கும் செவித்தாய். பாழ்பட்ட, பாவம் நிறைந்த இவள் வயிற்றில் நெடுங்காலம் தங்கியிருந்த எனக்கு உயிராகிய சுமை குறைந்து தேய, உடம்புகளெல்லாம் உயிரற்றுவிட்டதைப் போல் தோன்றும் இவ்வுலகத்தில் துன்பமே இல்லாத முகமுடையவள் இவள் ஒருத்தியன்றோ? இவள் என்னைப் பெற்றவள்.

## குகன் கைகேயியை வணங்குதலும் படகு செல்லுதலும்

71. என்னக் கேட்டவ் விரக்கமி லாளையும்
தன்னற் கையின் வணங்கினான் றாயென
அன்னப் பேடை சிறையில தாய்க்கரை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே.

(பரதன் அவ்வாறு கூறக்கேட்டுக் குகன்) இரக்கமில்லாத அந்தக் கைகேயியையும் தன் தாயைப் போல் தன் நல்ல கைகளால் கும்பிட்டான் (அப்போது) பெண் அன்னப்பறவை சிறகில்லாமல் கரை அடைந்தது என்று சொல்லும்படியாகத் தோணியும் வந்து சேர்ந்தது.

72. இழிந்த தாயர் சிவிகையி னேகத்தான்
பொழிந்த கண்ணீர்ப் புதுப்புனற் போயினான்
ஒழிந்தி லன்குக னும்முட னேகினான்
கழிந்த னன்பல காவதங் காலினே.

*தோணியினின்றும் இறங்கிய தாய்மார்கள் பல்லக்கில் செல்ல பரதன் பெருகிய கண்ணீரான புதிய வெள்ளத்தில் பலகாத தூரம் கால் நடையாகச் சென்றான்; குகனும் உடன் நடந்தான்.*

73. பரத்தி னிற்கும் பரத்துவ னென்னும்பேர்
வரத்தின் மிக்குயர் மாதவன் வைகிடம்
அருத்தி கூர வணுகின னாண்டவன்
விருத்தி வேதிய ரோடெதிர் மேவினான்.

*பரம் பொருளிடம் மனம் தங்கியுள்ள பாரத்துவாசன் என்னும் பெயருடைய வரத்தால் மிகப் பெரிய தவத்தை உடையவன் வாழும் ஆசிரமத்தை விருப்பத்தோடு நெருங்கினான். அப்போது அப்பரத்துவாச முனிவன், தமக்குரிய அறுதொழிலில் தவறாத வேதியர் பலருடன் பரதனை எதிர் கொண்டு அழைத்தான்.*

# குகனின் ஆளுமை

கம்பர் தம் இராமாவதாரத்தில் படைத்து வாழவைத்த பாத்திரங்கள் நூற்றுக் கணக்கில் உள்ளனர். அவர்கள் ஒவ்வொருவரும் சொல்லாலும் செயலாலும் தனித்தன்மை வாய்ந்தவர்கள். தோற்றத்தால் பெரும்பாலும் ஒத்திருப்பவர்கள் கூட குண இயல்புகளால் தனித்தன்மை படைத்தவர்களாக விளங்குகிறார்கள். ஒவ்வொருவரையும் தனித்தனியே எளிதாக அடையாளங் காண முடியும். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையான ஆளுமை உடையவர்கள். இராமனுக்கு உடன் பிறந்த தம்பியர் மூவர். இடையில் வந்த தம்பி குகன். பரதன், இலக்குவன் சத்துருக்கன் ஒரு தந்தைக்குப் பிறந்தவர்கள். அவர்களின் இயல்புகளில் எத்தனையோ வேறுபாடுகள். இடையில் வந்து தன்னலங் கருதாத அன்பால், கரை காணா காதலால் இராமனுக்கு உயிர் போன்ற தம்பியாகிறான் குகன்.

## குகன் யார்?

குகன் கங்கையாற்றின் வட கரையிலுள்ள சிருங்கிபேரம் என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வரும் வேடர் குலத் தலைவன். கங்கையின் இரு கரைகளிலுமுள்ள காடுகள் அவன் ஆட்சிக்குட்பட்டவை. கங்கையாற்றில் செலுத்தும் ஆயிரம் ஓடங்களுக்குச் சொந்தக்காரன்.

## குகனின் தோற்றம்:

இருள் போன்ற கருநிறமுடையவன். கல்போன்ற தோள் வலிமை உடையவன். தொடை வரை சல்லடம் (கால் சட்டை) கட்டியவன் : இடையைச் சுற்றித் தொங்கும் புலிவால்கள் இணைக்கப்பட்ட தோலாடை அணிந்தவன். தலை முடியில் நெற்கதிர் சூடியவன். சூல் கொண்ட மேகம் இடிப்பதைப் போன்ற தன்மையுடையவன். துடி என்னும் உடுக்கை போன்ற பறையை உடையவன். பகைவர்களைத் தாக்கிக் கொல்லும் வில்லேந்திய வீரன்.

வலிய பனஞ் சிறாம்பு போன்ற அடர்ந்த மயிர்கள் வளர்ந்துள்ள நீண்ட கைகள், பரந்த மார்பு, எண்ணெய் பூசியது

போன்ற மேனி, இடைக் கச்சோடு சேர்த்துக் கட்டப்பட்ட உடைவாள், பாம்பு போன்ற பயங்கரமான பார்வை, இந்திரனின் வச்சிராயுதம் போன்ற வலிய இடுப்பு, பைத்தியக்காரன் போன்ற பேச்சு இப்படிப்பட்ட உடலமைப்பையும் செயல்களையும் உடையவன் குகன்.

போர்க்களத்தில் ஊதுங்கொம்பு, சங்கு, பேரிகை போன்ற ஒலியெழுப்பும் கருவிகளையும் வில், அம்பு, போன்ற பல வகையான படைக்கருவிகளையுமுடைய, யானைகளின் கூட்டம் போன்ற சுற்றத்தாரையும் உடையவன் குகன்.

கள்ளும் மீனும் மிகுதியாக உண்ட நாற்றம், நகையில்லாத கடுகடுத்த முகம், நெருப்புப் போன்ற அஞ்சத்தக்க பார்வை, கூற்றும் அஞ்சும்படியாகக் குமுறும் குரலினான். இப்படிப்பட்ட கரடுமுரடான தோற்றத்தை உடைய காட்டு வேடன் குகன் இராமனைக் காணவருகிறான்.

இராமன் காட்டுக்கு வந்ததையோ, அவன் தொழத்தகும் பெருமை வாய்ந்தவன் என்பதையோ குகன் எப்படித்தெரிந்து கொண்டான் என்று தெரியவில்லை. ஒருகால் நாடாளும் சக்ர வர்த்தியின் மூத்தமகன் படைகள் புடை சூழ தேரில் வந்திருப்பதறிந்து அவனைக் காண வருவதாகக் கொள்ளமுடியும். "திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் கண்டேனே" என்று ஒரு ஆழ்வார் கூறுவதன் அடிப்படையில் அரச குமாரனை ஆண்டவனாகக் கருதி அடிமைத் தொண்டு செய்ய வந்திருப்பதாகக் கொள்ளலாம்.

எப்படியோ காரண காரியத் தொடர்பின்றி, இனந்தெரியாத உணர்ச்சியால் உந்தப்பட்டு இராமனைக் காண ஓடோடி வருகிறான் குகன். கரடு முரடான தோற்றத்தோடு புலால் நாற்றம் வீசும் குகன் இராமன் தங்கியிருக்கும் பரத்துவாச முனிவனின் தவப்பள்ளியை நெருங்குகிறான். சுற்றத்தாரைச் சற்று தூரத்தில் நிறுத்திவிட்டு வில், அம்பு, வாள் ஆகிய படைக்கருவிகளை நீக்கிவிட்டுத் தேனையும் மீனையும் பரிசுப் பொருளாகக் கொண்டுவருகிறான். வந்தவன் தான் ஒரு வேடன், தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவன் என்ற உணர்வில்

பள்ளிச்சாலையின் உள்ளே நுழையாமல் சற்றுத் தொலைவிலிருந்து குரல் கொடுக்கிறான்.

நின்றான் நெஞ்சின் நிரம்புறும் அன்பால்
இன்றே நின்பணி செய்திட இறைவா
நன்றே வந்தனன் நாயடியேன் யான்
என்றே கூவினன் எயினரின் இறையோன்.

## உள்ளந்துயவன்:-

குகனின் குரல் கேட்டு இலக்குவன் வெளியில் வந்து அவன் வந்த காரணத்தை வினவுகிறான். இராமனிடம் சென்று செய்தியைச் சொல்கிறான். குகனின் நல்ல பண்புகளைக் கண நேரத்தில் உணர்ந்து கொண்ட இலக்குவன் இராமனிடம் சென்று, தூய உள்ளமுடையவனும் தாய்போல் நல்லவனுமான குகன் காண வந்திருப்பதாகக் கூறுகிறான்.

"கொற்றவ நின்னைக் காணக் குறுகினன் நிமிர்ந்த கூட்டச்
சுற்றமும் தானும் உள்ளந் தூயவன் தாயின் நல்லன்
எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை குகன் ஒருவன்
என்றான்"

யாரையும் ஐயப்படக் கூடிய இலக்குவன், தன் தமையன் பரதனையே ஐயப்படும் இலக்குவன் சொல்லுகிறான். "தூய்மையான உள்ள முடையவன், தாயைப் போல் நல்லவன்" என்று. இராமனைக் காணு முன்னரே இலக்குவனல் ஏற்றுக் கொள்ளப்படும் அளவுக்குப் பண்பு நிறைந்தவன் குகன்.

## குகனின் பணிவுடைமை:-

இராமனின் அனுமதி பெற்ற குகன் பாட சாலைக்குள் சென்று அவனைக் கண்ணாரக் கண்டு மகிழ்கிறான். மெய் மறக்கிறான். தலைமுடி தரையில் படும்படி விழுந்து வணங்கி எழுகிறான். ஒரு கையால் வாயைப் பொத்திக் கொண்டு மறு கையைக் கட்டிக் கொண்டு, கூனிக் குறுகி நிற்கிறான். தன் எதிரில் அமரச் சொல்கிறான் இராமன். முனிவர்களுக்கும் சக்கரவர்த்தித் திருமகனுக்கும் எதிரில் அமர்வது தகுதியன்று என்றும் அது பணிவுடைமையாகாது என்றும் கருதி போலும் குகன் அமராமல் நிற்கிறான்.

தாயினும் இனியன்:-

அன்பு தோன்றி வளர்ந்து, நின்று நிலைத்து வாழுமிடம் தாய். தாய் தன் உடம்பின் ஒரு பகுதியைப் பிரித்தெடுத்து, உயிர் கொடுத்து, உணர்வு கொடுத்து உலவவிடும் படைப்புக் கடவுள். இந்த உண்மையை அறிந்த பிற்கால அவ்வையார் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்கிறார். "அன்னே உன்னையல்லால் இனி யாளா நினைக்கேனே" என்று உள்ளம் உருகப் பாடுகிறார் சுந்தரர்.

"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த அரமுதே
இம்மையே உனைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது இனியே"

என்று பாடுகிறார் மணிவாசகர். ஆண்டவனின் அன்பை அடியார்கள் இவ்வாறு போற்றுகிறார்கள்.

இங்கு அடியவனான குகனிடம் கண்ட அன்பை ஆண்டவனான அரசன் பாராட்டுகிறான். இலக்குவன் கூறுவது போல் குகன் தாயினும் சாலப் பரிந்தூட்டும் தண்ணனி உடையவன். இராமனைக் காண வந்தவன் அவன் உண்பதற்குத் தேனும் மீனும் கொண்டு வந்து உண்ணமனமுண்டோ என்று இராமனைக் கேட்கிறான். உண்ணும் படிக் கட்டாயப் படுத்தவில்லை. கேட்கும் முறையிலிருந்து அவனுடைய அடக்கம், பணிவு, பண்பார்ந்த நிலை விளங்குகின்றன.

தீராக் காதலன்:-

குகன் கொண்டு வந்த பொருள்களை உண்ணாமல் உண்டதற்குச் சமம் என்கிறான் இராமன். அதுகேட்டு குகன் வருந்தவில்லை. இரவு சென்று மறுநாள் காலை தான் கங்கையைக் கடப்பதற்குப் படகு கொண்டு வரப் பணிக்கிறான் இராமன். இராமனை விட்டுப் பிரிய குகனுக்கு மனம் வரவில்லை. அரண்மனையில் இருந்து அரியணையில் அமர்ந்து உலகாளும் உரிமை படைத்த இராமன் மரவுரி தரித்துத் துறவுக் கோலம் புண்டு காட்டுக்கு வந்து குடிசையில் அமர்ந்திருக்கும் காட்சி குகனை வாட்டுகிறது. இராமனை அந்த நிலையில்

காண நேர்ந்த கண்களைப் பறித்தெறிய வில்லையே என்று கவலைப்படுகிறான். இராமனுக்குத் தன்னாலியன்ற உதவி ஏதாகிலும் செய்யவேண்டுமென்று விரும்புகிறான். அடிமைத் தொண்டு செய்ய அனுமதி கேட்கிறான்.

கார்குலாம் நிறத்தான் கூறக் காதலான் உணர்த்துவான்
பார்குலாம் செல்வ! உன்னை இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வனே நான் இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன் ஆனது ஐய செய்குவன் அடிமை யென்றான்.

## யாதினும் இனிய நண்பன்:-

இராமனை முன்பின் அறியாதவன் குகன். பயன் ஏதும் எதிர்பாராமல் தானே வந்து உள்ளார்ந்த அன்போடு உதவிக் கரம் நீட்டுகிறான். அவன் அன்பை, பக்தியின் திறத்தை உணர்கிறான் கருணையின் மலர்ந்த கண்ணன் இராமன். சீதையும் இராமனும் அறியுமாறு குறிப்பாகப் பார்த்து இவன் தீராக் காதலன்; யாதினும் இனிய நண்பன் என்று கூறுகிறான். இராமன் எல்லாம் அறிந்தவன். அவன் மேலோட்டமாக இவ்வாறு கூறியிருக்க முடியாது. உலகில் இனிமையானது எது? கண்டு, கேட்டு, உண்டு உயிர்த்து உரற்றறியும் ஐம்புலன்களால் அனுபவிக்கத் தக்க சுக போகங்கள், அவற்றை அனுபவிப்பதற்கு உயிரோடு வாழ வேண்டும். அதற்கு உயிர் இன்றியமையாது. உயிர் அவ்வளவு உயர்ந்தது. இதையெல்லாம் உணர்ந்த இராமன் குகனை "என்னுயர் அனையாய் என்றும், யாதினும் இனிய நண்பன், என்றும் கூறுகிறான். குகனின் அன்புக்குக் கிடைத்த பயன் இதைவிட வேறு என்ன இருக்க முடியும்?

அன்று இரவு இராமனுக்குக் காவலாக இருக்க இசைவு பெற்ற குகன் மகிழ்ச்சியடைகிறான். சேனை சூழ, வில்லேந்திய கையனாய் இலக்குவனோடு கண்ணுறங்காமல் விழித்திருந்து இரவெல்லாம் இராமனுக்குக் காவல் புரிகிறான். இராமன் நாடு துறந்து காடேகிய விவரமறிந்து கண்ணீர் வடிக்கிறான்.

## குகனின் வேண்டுகோள்:-

பொழுது புலர்ந்ததும் இராமன் தன்னை விட்டுப் பிரிந்து விடுவான் என்று எண்ணி வருந்துகிறான். கண்ணீரோடு

இராமனையும் சீதையையும் அடிவணங்கி அவர்களுக்குத் தேவையான பொருள்களைப் பட்டியலிட்டுச் சொல்லி அவை அனைத்தையும் தன்னால் தரமுடியும் என்றும் தன்னோடு தங்கியிருக்குமாறும் வேண்டுகிறான். இராமனுக்கு அடிமைத் தொண்டு செய்யும் உரிமையான உறவைத் தனக்குத் தருமாறு வேண்டுகிறான். குகனின் அன்புப் பிணைப்பை அறுக்கலாகாதவனாக இராமன் கூறுகிறான்

> புண்ணிய நதியாடிப் புனிதரை வழிபாடுற்று
> எண்ணிய சில நாளில் குறுகுதும் . . .

என்று குகனைச் சமாதானப் படுத்திப் படகைக் கொண்டு வரச் சொல்கிறான். படகு வருகிறது. பக்தியுடைய குகன் செலுத்துகிறான்.

### குகன் உடன் செல்ல விரும்புதல்:-

கங்கையின் தென்கரையடைந்த இராமன் குகனிடம் சித்திர கூடம் செல்ல வழி கேட்கிறான். இராமனுக்குத் தொண்டு செய்வதையே தன் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்ட குகன் தன்னையும் உடன் அழைத்துச் செல்ல வேண்டுகிறான். காட்டில் வழிதேடிச் செல்லும் அவர்களுக்கு வேட்டுவனான தான் எவ்வாறெல்லாம் உதவமுடியும் என்பதை விளக்கமாகக் கூறி இராமனின் உடன் பாட்டைப் பெற முயல்கிறான்.

### இராமன் குகனைத் தம்பியெனல்:-

குகனின் விருப்பத்தை அறிந்த இராமன் உள்ளம் நெகிழ்கிறான். குகனைச் சமாதானப் படுத்துகிறான். "என் உயிர் போன்றவனே! என் தம்பி இலக்குவன் உனக்குத் தம்பி. இந்தச் சீதை உனக்குக் கொழுந்தி, இந்த உலகமெல்லாம் உன் ஆட்சிக்குட்பட்டது. நீ அரசன். நான் உன் தொழிலில் உரிமை உடையவன்." என்று கூறி உறவு கொண்டாடுகிறான்.

> "என்னுயிர் அனையாய் நீ. இளவல் உன் இளையான், இந்
> நன்னுதல் அவள்நின் கேள். நளிர்கடல் நிலமெல்லாம்
> உன்னுடையது. நான்உன் தொழிலுரிமையில் உள்ளேன்"

மேலும் இராமன் சொல்கிறான், தான் அயோத்தியை விட்டுப் பிரிந்த பின் அந்த நாட்டை ஆளுதற்குக் குகனின் தம்பி

பரதன் அங்கு இருப்பதைப் போல் தான் காடு சென்ற பின் தனக்கும் சொந்தக் காரர்களாகி விட்ட சிருங்கிபேர நாட்டு மக்களைக் காப்பது கடமை என்று குகனுக்குக் கட்டளை இடுகிறான். குகனைத்தன் உடன்பிறப்பாக ஏற்றுக் கொண்டதோடு அவன் உறவினர்களையும் தன் உறவினனாக ஏற்றுக்கொள்ளும் அளவுக்குச் சிறந்தது குகனுடைய அன்பாகிய ஆளுமை.

எனவே, "என் தம்பியாகிய நீ என் கட்டளையின் படி நம் உறவினர்களைக் காப்பது உன் கடமை" என்று கூறிக் குகனை இணங்க வைக்கிறான். குகனும் ஏதும் கூற முடியாமல், தாங்கமுடியாத துயரத்தோடு இராமன் இட்ட கட்டளையை ஏற்றுக் கொள்கிறான்.

இங்கு யாருடைய ஆளுமை வெற்றி பெறுகிறது? குகனுடைய ஆளுமையா? இராமனுடைய ஆளுமையா? என்ற ஐயம் எழுதல் இயல்பு. இங்கு அன்பு கொண்டவன் குகன் அன்புக்கு ஆட்பட்டவன் இராமன். இந்த அடிப்படையில் வெற்றி பெற்றது குகனுடைய ஆளுமையே. தன்னோடு உடன் வரத் துணிந்துவிட்ட குகனை அமைதிப்படுத்தி விட்டுப் பிரிந்து சென்ற இராமனுடைய ஆளுமைக்கு இறுதி வெற்றி. ஒரு ஆண் ஒரு பெண்ணை விரும்புகிறான். அவளும் விரும்புகிறாள். காதல் வளர்ந்து குறிஞ்சியாக மலர்கிறது. இதில் தோல்விக்கு இடமேது? இருவர் பெறுவதும் வெற்றி தானே? அதைப்போல் குகன், இராமன் அன்புப்பிணைப்பில் இருவரும் வெற்றி பெறுகின்றனர் என்பதே உண்மை.

## குகனைப் பெயரிய கூற்றின் ஆற்றலான்:-

இதுவரை நாம் கண்ட குகன் தாய் அன்புக்காக ஏங்கித் தவிக்கும் குழந்தையைப் போன்றவன் இராமனுக்குத் தொண்டு செய்ய ஏங்கித்துடிக்கும் தொண்டன். இங்கு நாம் காணும் குகன் பாயும் புலியாக, இயமன் போன்ற கொல்லும் தன்மையுடையவனாகக் காணப்படுகிறான். இராமனைக் காணக் கங்கையின் வட கரையில் காத்திருக்கும் பரதனைக் கண்டு சீற்றமடைகிறான் குகன். பரதன் இராமன் மேல் படையெடுத்து வந்திருப்பதாக முடிவு செய்து விடுகிறான். சினங்கொள்கிறான். சிரிக்கிறான். கண்கள் சினத்தால்

சிவக்கின்றன. நாசியில் புகையெழ புருவங்கள், போர்வில்லைப் போல் நெரிந்தன. ஆரவாரத்துடன் போர்புரியத் துடிக்கும் தோள்களுடன் வீர மொழி பேசுகிறான்.

பரதனுடைய படைகளெல்லாம் எலியைப் போன்றவை என்றும் தான் அவற்றை உண்ணும் பாம்பு போன்றவன் என்றும் கூறுகிறான். பரதனின் படையை அழித்து இராமனுக்கு ஆட்சியைக் கொடுக்க வேண்டும் என்று கூறிப் போர்க் கருவிகளை முழக்குமாறு படைக்குக் கட்டளையிடுகிறான். பரதன் இராமனைத் தாக்கவேண்டுமென்றால் கங்கையைக் கடந்தாக வேண்டும். அது தான் உயிரோடிருக்கும் வரை இயலாது என்று குகன் கூறுகிறான்.

ஆழ நெடுந்திரை ஆறு கடந்திவர் போவரோ?
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
தோழமை என்றவர் சொல்லிய சொல்லொரு
சொல்லன்றோ?
ஏழமை வேடன் இறந்திலன் என்றுஎனை ஏசாரோ?

தோழன் என்று இராமன் கூறியதைப் பெறற்கரிய பேராகக் கருதிய குகன் இராமனுக்காகத் தன் உயிரையும் தியாகம் செயயத் துணிகிறான்.

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"

என்று வள்ளுவர் கூறும் அன்புடைமைக்குக் குகன் சான்றாகத் திகழ்வது மனங்கொளத் தக்கது.

படையெடுத்து வந்த பரதன் இராமன் தனக்கு மூத்தவன் என்றோ மாபெரும் வீரனான இலக்குவன் துணைநிற்கிறான் என்றோ எண்ணவில்லை என்று எண்ணிப்பார்த்த குகன்.

என்னிவன் என்னை இகழ்ந்தது? இவ்வெல்லை
கடந்தன்றோ?
மன்னவர் நெஞ்சினில் வேடர்விடும் சரம் வாயாவோ?

குகன் தான் மாபெரும் வீரன் என்பதை உணர்ந்தவன். தாழ்ந்த குலத்தவர்களும் அரச குலத்தாரை எதிர்த்துத் தாக்க

முடியும்; அழிக்க முடியும் என்று சொல்கிறான். இது குகனின் வீரத்தையும் போர்க் குணத்தையும் விளக்குவதாகும். இராமன் தன்னைத் தோழன் என்று சொன்னதைப் பெறற்கரிய பேறாகக் கருதுகிறான். மேலும் குகன் சொல்கிறான் ஆள வந்தவர்கள் பாவம், புண்ணியம், நல்லது, கெட்டது, பகைவர்கள், நண்பர்கள் பழிக்கத் தக்க செயல், பாராட்டத்தக்க செயல்கள் என்றெல்லாம் எண்ணிப் பார்ப்பதில்லையோ என்று நினைக்கிறார்.

பாவமும் நின்ற பெரும் பழியும் பகைநண்போடும்
ஏவமும் என்றிவை மண்ணுலகு ஆள்பவர் எண்ணாரோ?

கம்பனின் குகன் அரசுகள் பற்றிக் கூறும் இக்கருத்து ஆழ்ந்த சிந்தனைக் குரியது.

(அரசு என்பது மக்களைச் சுரண்டும் ஆற்றல் வாய்ந்த வன்முறை ஆயுதம். அது தன்னலத்தையும் தன் வர்க்க நலத்தையும் பாதுகாத்துக் கொள்வதற்காகப் பட்டாளம், சட்டம் நீதி போன்ற வன்முறைக் கருவிகளை வைத்துக் கொண்டிருக்கிறது. அது மனிதாபிமான மற்றது; மக்கள் நலத்தை மதிக்காதது என்று மார்க்சிய லெனினிய தத்துவம் கூறுவதைப் போல் இருக்கிறது.)

மேலும் மகா கவி பாரதி பாஞ்சாலி சபதத்தில் கூறுவதும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. பாரதி கூறுகிறான்.

நாட்டு மாந்தர் எல்லாம் - தம்போல்
நரகர்கள் என்று கருதார்
ஆட்டு மந்தை யாமென்று - உலகை
அரசர் எண்ணி விட்டார்
ஒரஞ் செய்திடாமே - தருமத்து
உறுதி கொன்றி டாமே
ஊரை யாளும் முறைமை - உலகில்
ஓர் புறத்தும் இல்லை (பாஞ்சாலிசபதம் பகுதி II - 16-17)

தன் எல்லை கடந்த அன்புக்குப் பாத்திரமான இராமன் காடாள, அவன் ஆட்சியைக் கைப்பற்றிய குகன் மட்டும் நாளாள்வதா? என்று எண்ணுகிறான் குகன்.

அருந்தவம் என்துணை ஆள இவன்புவி ஆள்வானோ
மருந்தெனின் அன்றுஉயிர் வண்புகழ் கொண்டு
மாயோனோ?

வள்ளுவர் கூறுவது போல் அன்புடைமை என்பது பிற உயிர்களை நேசிக்க வேண்டுமென்னும். ஆர்வத்தை உண்டாக்கும். அந்த ஆர்வமுடைமை நட்பு என்னும் நாடிப் பெற முடியாத செல்வத்தைக் கொடுக்கும்.

"அன்பு ஈனும் ஆர்வம் உடைமை அது ஈனும்
நண்பு என்னும் நாடாச் சிறப்பு"

குகனின் மனித நேய ஆர்வம் இராமனின் நட்பு என்றும் கிடைத்தற்கரிய செல்வத்தைக் கொடுத்தது. நட்பு கொள்வது நல்லது. அறத்துவழிப்பட்டது. பகைமை கொள்வது தீயது; மறத்து வழிப்பட்டது அறம் செய்வதற்குப் பயன்படும் அன்பு மறம் செய்யுமா? உயிர்காக்க உணவு தரும் பயிரைக் காப்பாற்ற வேண்டுமென்றால் ஊறுவிளைவிக்கும் களையை நீக்குவது அறம்.

"அறத்திற்கே அன்புசார்ப என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை"

என்று வள்ளுவர் கூறுவது போல் தன் அன்புக்கு உரிய இராமனுக்கு ஊறு செய்ய வந்ததாக அவன் கருதும் பரதனை அழிக்க நினைக்கிறான் குகன்.

"கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல்
பைங் கூழ் களைகட்டதனொடு நேர்"

என்று வள்ளுவர் கூறுவது போல் இராமன் மேல் படையெடுத்து வந்ததாக அவன் கருதிய பரதனைப் படைகொண்டு தாக்க முயல்கிறான். அவனுக்கு அது அறம் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் வள்ளுவர் கூறும் இலக்கியத்துக்கு ஏற்ற இலக்கியமாகக் கம்பர் குகனைப் படைத்திருப்பாரோ என்ற முடிவு பொருந்துவதாகத் தெரிகிறது.

மன்னவர் நெஞ்சினில் வேடர் விடும்சரம் வாயாவோ என்றும் அருந்தவம் என்துணை ஆள இவன்புவி ஆள்வானோ?

என்றும் நினைக்கிறான். போரிட்டுப் பரதனை அழிப்பது முடியாவிட்டால் மாய்வது என்று முடிவு செய்து விடுகிறான். இராமனுக்கு மரவுரி உடுத்தும் துறவுக் கோலத்தைக் கொடுத்த கைகேசியின் மைந்தன் பரதனைச் சேனையுடன் கொன்று குவித்துக் கங்கையில் வீசப் போவதாகச் சூளுளாக்கிறான்.

நின்ற கொளடக்கை என்அன்பன் உடு க்க நெடுஞ்சீரை
அன்று கொடுத்தவள் மைந்தர் பலத்தையென் அம்பாலே
கொன்று குவித்த நிணங்கொள் பிணக்குவை கொண்டோடித்
துன்று திரைக்கடல் கங்கை மடுத்திடை தூராதோ?

இது குகனின் கூற்று.

### அன்புக் கடல்களின் சங்கமம்:-

தன்படையைத் தயார் நிலையில் வைத்து விட்டுப் பரதனின் நோக்கத்தை அறிய கங்கையின் வடகரையை அடைகிறான் குகன். பரதனின் தோற்றத்தைக் கண்டு அதிர்ச்சி அடைகிறான். மரவுரி தரித்து மாசடைந்த மெய்யொடு கல்லும் கனியும் படியாகக் கவலை தோய்ந்த முகத்தோடு காட்சியளிக்கும் இவனாபோருக்கு வந்துள்ளான்? சீற்றம் மறைகிறது. சிந்தனை வளர்கிறது. அவனையும் அறியாமல் அவன் கையில் பிடித்திருந்த வில் நழுவி விழுகிறது. செய்வதறியாது திகைத்து நிற்கிறான்.

இராமனுக்குத் தோழன் என்பது அறிந்து தம்பியுடன் எழுந்தோடி வந்து குகனின் பாதங்களை வணங்குகிறான் பரதன். பணிந்த அழுத கண்ணீரும் சிந்தையுமாக அண்ணனைத் தேடி அருங்கானடைந்த அன்பின் வடிவம், தியாகச் செம்மல் பரதன், ஒரு பக்கம். நட்புக்காகத் தன் உயிரையும் தியாகம் செய்யத் துணிந்த அன்பின் வடிவம் குகன் மறு பக்கம். இரண்டு ஆழங்காண முடியாத அன்புக் கடல்கள் சங்கம்மாகின்றன. தன்னைப் பணிந்த பரதனின் உள்ள நிலையை உணர்ந்து கொண்ட குகன் அவனைப் பற்றித் தவறாக எண்ணியதற்கு மன்னிப்புக் கேட்பவனைப் போல் அவன் சேவடிக் கமலம் புவில் புட்டிய கையன், பொய்யில் உள்ளத்தன் புகலுகிறான்.

குகனின் சொல் வன்மை:-

"தாயுனா கொண்டு தாதை உதவிய தரணிதன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்றபோது புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியினம்மா"

என்று பரதனைப் பாராட்டுகிறான்.

இராமனின் அன்புக்கு அடிமையான குகன், பரதனின் அன்பு, தியாகம் போன்ற பண்பு நிலையைக் கண்டு ஆயிரம் இராமர்கள் கூட அவனுக்கு ஒப்பாக மாட்டார்கள் என்று கூறுகிறான். மேலும் சூரியன் மற்ற ஒளிகளெல்லவற்றையும் மறைத்துத் தான் ஒன்று மட்டுமே விளங்குவதைப் போல் குகன் உலகத்திலுள்ள புகழ்கள் அனைத்தையும் மறைத்துத் தன் புகழ் மட்டும் நிலைக்கும்படிச் செய்து விட்டான் என்கிறான்.

காட்டு வேடன் குகனா இவ்வாறு பேசுகிறான்? ஆம் கரடு முரடான காட்டு வேடன், கம்பனின் வேடன், பணிவு, அன்பு, பக்தி, வீரம், விவேகம், கற்பனைத் திறன். சொல்லாற்றல் போன்ற பல பண்புகளின் உறைவிடமான குகன் பேசுகிறான்.

பின்னர் பரதனும் தாய்மார்களும் சேனைகளும் கடப்பதற்குப் படகு தந்து உதவுகிறான் படகில் செல்லும் போது கோசலை, கைகேயி, சுமித்திரை ஆகியவரைப்பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டு வணங்குகிறான். பரதன் கோசலையைப் பற்றிக் கூறியவுடன் அவள் அடிகளில் விழுந்து வணங்குகிறான். வணங்கிய குகனைப் பற்றிக் கோசலை கூறும் கருத்தும் குகனின் பண்பு நலத்தை விளக்குவதாகும்.

பரதனைப் பார்த்துக் கோசலை கூறுகிறாள். குகனைத் தோழனாகப் பெற வாய்ப்புக் கிடைத்ததால் இராமன் காடு சென்றதும் நல்லலாயிற்று. நீங்கள் யாரும் வருந்த வேண்டாம். யானையைப் போல் வலிமை படைத்த காளை போன்ற இக்குகனோடு நீங்கள் ஐந்து பேரும் ஒருவராக இருந்து உலகத்தை நெடுங்காலம் ஆள்வீராக என்று வாழ்த்துகிறாள்.

"நைவீர்அலிர் மைந்தீர் இனித்துயரால் நாடிழுந்து காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலமாயிற்றாம் அன்றே விலங்கல்
திண்தோள்
கைவீரக் களிறனைய காளையிவன் தன்னோடும் கலந்து நீவிர்
ஐவீரும் ஒருவீராய் அகலிடத்தை நெடுங்காலம் அளித்திர்
என்றாள்."

*இராமன் குகனைத் தன் தம்பியருள் ஒருவனாக ஏற்றுக் கொண்டான். இராமனின் தாய் கோசலையும் குகனைத் தன் மகனாக ஏற்றுக் கொள்கிறாள்.*

*இராமன், குகனைத் தன் தம்பியருள் ஒருவனாக ஏற்றுக் கொண்டதை உறுதி செய்யும் வகையில் பல ஆண்டுகளுக்குப் பின்னர், இலங்கை மீது படையெடுத்த போது தன்னிடம் அடைக்கலம் அடைந்த வீடணனிடம் கூறுவதும் நினை கூறத்தக்கது. முன்னர் நால்வராக இருந்த நாங்கள் குகனோடு சேர்ந்து ஐவரானோம். அடுத்துச் சுக்கிரீவனோடு சேர்ந்து அறுவரானோம். இன்று உன்னோடு சேர்ந்து எழுவரானோம் என்று கூறுகிறான்.*

"குகனொடும் ஐவர் ஆனோம்
முன்புபின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனோம்
எம்முறை அன்பின் வந்த
அகனமர் காதலைய நின்னொடும்
எழுவர் ஆனோம்
புகலரும் காதல் தந்து புதல்வரால்
பொலிந்தான் உந்தை" (யுத்த. கா. 449)

*நான் நாட்டை விட்டுக் காடுறை வாழ்க்கையை மேற்கொண்டதால் நான்கு பிள்ளைகளைப் பெற்ற தசரதன் ஏழுபிள்ளைகளுக்குத் உரிமை கொண்டாடும் நம் தந்தையாகியுள்ளான் என்று கூறுகிறான். தசரதன் தன் பிள்ளைகளின் எண்ணிக்கையைப் பெருக்கிக் கொண்டானாம்.*

*அயோத்தியா காண்டத்தில் இராமன் குகனைத் தம்பி என்று கூறியதை உறுதிசெய்வது போல் சீதை இலங்கை*

அசோகவனத்தில் சிறையிருந்த காலத்தில் நினைவு கூர்வது மனங்கொளத்தக்கது.

ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு எம்பியுன் தம்பி நீ
தோழன் மங்கை கொழுந்தி யெனச் சொன்ன
வாழி நண்பினை உன்னி மயங்குவாள்"

(அந்தரகாண்டம் 352)

கம்பராமாயணத்துக்கு முதல் நூலான வால்மீகி இராமாயணத்தில் குகனுக்கு இவ்வளவு சிறப்பளிக்கப்படவில்லை. அவ்வாறிருக்க, கம்பர் மட்டும் ஏன் இவ்வளவு சிறப்பளிக்க வேண்டும்? கம்ப இராமாயணத்தை எழுதத் தொடங்குவதற்கு முன்னரே இராமாயணக் கதை சில மாற்றங்களுடன் தமிழகத்தில் பெருவழக்காக இருந்தது. ஆழ்வார்கள் குகனையும் பரதனையும் சிறப்பித்துப் பாடலாயினர். அவர்களின் செல்வாக்கில் வால்மீகி கூறாத செய்திகளைக் கூறிக் கம்பனும் குகனை மிகவும் பாராட்டிப் பாடியுள்ளார் எனலாம். திருமங்கையாழ்வார் குகன் பற்றிக் கூறுவதைக் காண்போம்.

"ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவனுக்கு இன்னருள் சுரந்த
மாழை மான்மட நோக்கி உன் தோழி
உம்பி எம்பிஎன்று ஒழிந்திலை, உகந்து
தோழன் நீயெனக்கு இங்குஒழி என்ற
சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட
ஆழி வண்ண நின் அடியிணை அடைந்தேன்
அணிபொழில் திரு வ்ரங்கத்து அம்மானே."

(திருமங்கையாழ்வார் - நாலாயிர திவ்யபிரபந்தம் 1418 - பெரியதிருமொழி)

இவ்வாறு ஆழ்வார்கள் பாடியதற்கு ஏற்ப கம்பரும் வால்மீகி அளிக்காத சிறப்புக்களைக் குகனுக்கு அளித்துச் சிறப்பித் திருப்பதாகத் தெரிகிறது.

சுருக்கமாகச் சொன்னால் குகனின் ஆளுமை என்று குறிப்பிடத் தக்கது அன்புடைமை, அன்பு ஒன்றே எனலாம். கல்வியறிவு இல்லாத காட்டு வேடன், கரடுமுரடான தோற்றமுடையவன். கம்பனின் பார்வையில் சொல்லுவதென்றால் தாழ்ந்த குலத்தைச் சார்ந்தவன். இயமனும் அஞ்சத் தக்க உடல் வலி மிகுந்தவன். அவன் குணஇயல்புகளில் தலை சிறந்து விளங்கும் பண்பு அன்புடைமை, போர்க்குணம், எளிதில் உணர்ச்சி வயப்படும் தன்மை, சிந்திக்கும் திறன், சொல்லாற்றல் போன்ற ஏனை பண்புகள் அனைத்தும் அன்புடைமை என்னும் ஆளுமையில் அடங்கி விடுகின்றன. குகனின் உள்ளத்திலிருப்பதில்லை அன்பு. அது அவன் உடம்பாகவும் உயிராகவும் இருக்கும் ஒன்று. வள்ளுவர் கூறும்

> "அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
> என்போ டியைந்த தொடர்பு"

என்னும் குறளுக்கு ஏற்ற இலக்கியமாவான்.

கங்கைவேடனான குகனைப் பற்றிப் படிக்கும் போது காளத்தி வேடனான கண்ணப்பன் நம் நினைவுக்கு வருகிறான். கண்ணப்பன் சேக்கிழாரின் பெரிய புராணத்தில் இடம் பெறும் பாத்திரம். குகன் வால்மீகி இராமாயணத்தின் மூலம் அறிமுகமானவன். கண்ணப்பன் பெரிய புராணம் இயற்றப்படுவதற்கு முன்பே மக்கள் மன்றத்தில் பேசப்பட்டு வந்த ஒரு கதை மாந்தன்.

கண்ணப்பன் வேட்டையாடுதற்குச் சென்ற காட்டில் கண்ட சிவலிங்கத்துக்கு மான், பன்றி போன்றவற்றின் இறைச்சியைப் படைக்கிறான். சிவன் உண்டு விடுகிறான். இலிங்கத்தின் ஒரு கண்ணில் நீர் பெருகக் கண்டு தன் கண்ணைப் பெயர்த்து லிங்கத்தின் கண்ணில் பொருத்துகிறான். இரண்டாவது கண்ணிலும் நீர் வடியக் கண்டு தன் மற்றொரு கண்ணையும் பெயர்த்தெடுக்க முடிவு செய்கிறான். எஞ்சிய தன் ஒரு கண்ணையும் நீக்கிவிட்டால் இறைவனின் கண்ணிருக்குமிடம் தெரியாதே. எனவே தன் செருப்புக் காலால் சிவனின் கண்ணை மிதித்துக் கொண்டு தன் கண்ணைப் பெயர்த்துக் காலால் மிதிக்கப்பட்ட இடத்தில் பொருத்துகிறான்.

கண்ணப்பனின் அன்பு நிலையை சிவகோசரியாருக்கு உணர்த்திய சிவன் மனம் நெகிழ்ந்து "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை காண்டியால்" என்று கூறி ஆரத்தழுவிக் கொள்கிறான்.

கண்ணப்பன் அன்பின் காரணமாக ஆண்டவனால் அரவணைத்துக் கொள்ளப்படுகிறான். குகன் அன்பின் காரணமாக, ஆண்டவனின் அவதாரமான இராமனால் யாதினிடம் இனிய நண்பனாகவும் உடன்பிறவா சகோதரனாகவும் ஏற்றுக்கொள்ளப்படுகிறான். கங்கை வேடனும் காளத்தி வேடனும்

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"

என்னும் இலக்கணத்துக்கு ஏற்ப அன்பின் உருவெடுப்பாய் அன்பையே ஆளுமையாகப் பெற்றவர்கள் எனலாம்.

## இராமனின் ஆளுமை

பக்தி நூல்களில் பேசப்படும் இராமன் திருமாலின் அவதாரம். எல்லாம் வல்லவன். வால்மீகியின் இராமன் பிறந்து மறைந்த மாவீரனான காப்பியத் தலைவன். கம்பனின் இராமன் திருமாலின் அவதாரமான மனிதன். செயற்கரும் செயல்களைச் செய்யும் தன்னேரிலாத தலைவன். கோசலையின் மகன் இராமன் அழகன், அறிஞன், கடமை வீரன், அறத்தின் நாயகன், கருணைக் கடல். திருமகளும், நில மகளும் போட்டி போட்டுக் கொண்டு இன்னுயிர்த் துணைவன் என எண்ணும் இயல்பினன்.

"பொன்உயிர்த் பூமடந்தையும் புவியெனும் திருவும்
இன்னுயிர்த் துணை இவனென நினைக்கின்ற இராமன்"

"வேதியர் முதலான யாவரும் தாம் செய்த
நல்லறப் பயனெனக் கருது கின்றனர்"

"கண்ணினும் நல்லவன் கற்றவரும் கற்றிலாதவரும்
உண்ணும் நீரினும் அவனையே உகப்பர்"

மனிதர் வானவர் மற்றுளோர் அற்றம் (துயரம்) காத்தளிப்பான். இனிய மன்னுயிர்க்கு இராமனைப் போல் சிறந்தவன் வேறுயாரும் இல்லை என்பது கம்பன் முடிவு. கம்பன் படைத்த இராமனின் குணப்பெருமைகளைப் பட்டியலிட்டுக் கூறுவதென்றால் பல நாளாகும்.

இங்கு நம் ஆய்வு எல்லைக்குட்பட்ட குகப்படலம், கங்கை காண்படலம் ஆகிய இரு பகுதிகளில் இடம் பெறும் இராமனின் ஆளுமை பற்றிச் சிறிது காண்போம். கைகேயி தசரதனிடம் பெற்ற வரத்தின் படி இராமன் சீதை, இலக்குவருடன் காட்டுக்குச் செல்கிறான். கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுப் பாதையில் நடக்கிறான். கங்கைக் கரையில் காட்டு வேடன் குகனின் நட்பைப் பெறுகிறான். முன்பின் அறியாத குகன் தன்னிடம் காட்டும் பக்தியும் அந்தப் பக்தியைப் பரதனின் தமையன் இராமன் ஏற்றுக் கொள்ளும் பாங்கும் அவனுடைய ஆளுமையின் அடையாளமாகும். அது பற்றிச் சிறிது காண்போம்.

## இராமனின் தோற்றம்

தன் சிற்றன்னைக்குத் தந்தை அளித்த வாக்கை நிறைவேற்றி மெய்ப்பிக்கும் பொருட்டுப் பதினான்கு ஆண்டுகள் வனவாசத்தை மேற்கொண்ட இராமனின் மன உறுதி அவனுடைய ஆளுமையின் சிறந்த ஒன்று எனலாம். பாண்டவர்கள் பன்னிரெண்டு ஆண்டு வனவாசமும் ஓராண்டு மறைந்துறை வாழ்க்கையும் மேற்கொள்வது கட்டாயத்தின் பேரில். ஆனால் இராமன் மேற்கொள்ளும் வனவாசம் அவன் விரும்பி ஏற்றுக் கொள்வது. துன்பங்களைத் துணிந்து ஏற்றுக் கொள்கிறான். அவ்வாறு ஏற்றுக் கொண்டு வெய்யிலில், கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுப் பாதையில் நடந்த இராமன் களைத்து, இளைத்து மெலிந்து போனானா? இல்லை. அவன் தோற்றப் பொலிவு பற்றிக் கம்பன் கூறுகிறான்.

வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்
பொய்யொவெனு மிடையாளொடு மிளையானொடும்
போனான்

மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ
ஐயோவிவன் வடிவென்பதோ ரழியாவழ குடையான்

உலகத்திலுள்ள பொருள்களை எல்லாம் தன் ஒளியால் விளக்கும் சூரியனின் ஒளி இராமனின் கரிய திருமேனியின் ஒளியில் மறைந்து விடுகிறதாம். அவன் உடல் வண்ணம் மையோ, மரகதக் கல்லோ, கருங்கடலோ, கருமேகமோ என்று வியந்து ஐயுறும் படியாக இருந்ததாம்.

கங்கைக் கரையை அடைந்த இராமன் தவமுனிவர்களால் வரவேற்கப்படுகிறான். முனிவர்கள் எந்த தெய்வ கதியை அடைய வேண்டித் தவமிருக்கிறார்களோ அந்த உயர்கதியே உருவங் கொண்டுத் தங்களைத் தேடி வந்திருப்பதாக நினைக்கின்றனர். திரண்டு வந்து கண்டு களிக்கின்றனர். போற்றிப் புகழ்ந்து ஆடிப்பாடி வரவேற்கின்றனர். அவன் நீராடிய கங்கை புனிதமடைந்ததாம். இவைகளெல்லாம் இராமனின் தெய்வீகத் தன்மைகளை விளக்குவன.

## செம்பொருள் கண்டான்

இனி மனிதர்களோடு பழகும் மனிதனான இராமனைக் காண்போம். காட்டுவேடன் குகன் கல்வி அறிவு இல்லாதவன். கள்ளும் ஊனும் உண்ட நாற்றத்தோடு கடிய தோற்றத்தை உடையவன். எவ்வாறோ இராமன் காட்டுக்கு வந்திருப்பதை அறிந்து அவனைக் காணச் செல்கிறான். முன் பின் பழக்கமில்லாத குகன் இராமனின் அடிகளில் வீழ்ந்து வணங்கிக் கை கட்டி வாய் பொத்திக் கூனிக் குறுகி நிற்கிறான். இவைகளெல்லாம் தன்னைக் கண்ட அளவிலேயே பிறறைப் பிணிக்கும் இராமனின் தோற்றப் பொலிவு, பண்பு ஆகியவற்றின் வெற்றி எனலாம்.

தன்னைக் காண வந்த குகன் தேனும் மீனும் கொண்டு வந்து இராமனை உண்ண வேண்டுகிறான். கம்பனின் இராமனும் முனிவர்களும் புலால் உண்ணாதவர்கள்.

இராமனால் உண்ணவும் முடியவில்லை. மறுக்கவும் முடியவில்லை. இராமன் கூறுகிறான்.

அரியதாம் உவப்ப உள்ளத்து அன்பினால்
அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த என்றால் அமுதினும்
சீர்த்த அன்றே
பரிவினில் தமீஇய என்னில் பவித்திரம்
எம்மனோர்க்கும்
உரியன இனிதின் நாமும் உண்டனம்
அன்றோ என்றான்.

உள்ளம் நிறைந்த அன்பினில் விளைந்த பக்தி தெரியுமாறு கொண்டுவந்த பொருள் அமுதைக் காட்டிலும் உயர்ந்தது, அன்போடு ஏற்றுக் கொள்ளத் தக்கது. எங்களுக்கும் தூய்மையானது. உண்ணுதற்கு ஏற்றது. நாம் உண்டதற்குச் சமமன்றோ என்று கூறுகிறான். இராமன் அரசகுமாரன் வேட்டுவர்களால் மதிக்கப்படும் முனிவர்களின் தவப்பள்ளியில் அமர்ந்திருப்பவன். குகன் கொண்டு வந்த பொருளை மறுத்திருக்க முடியும். இராமன் அவ்வாறு கூறவில்லை. குகனின் அன்பைக் காயப்படுத்த விரும்பவில்லை. மறுக்காமல் உண்டதற்குச் சமம் என்கிறான்.

"இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" *

என்று வள்ளுவர் கூறுவதற்கேற்ப உண்டதற்குச் சமம் என்று சொல்கிறான். இராமன் கூறுவது மனத்தைப் புண்படுத்தாத அன்பு கலந்த பண்பார்ந்த இனிய சொற்கள்.

"இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார் வாய்ச் சொல்" *

என்று வள்ளுவர் கூறுவது போல் இராமன் கேட்டார் பிணிக்கும் சொல்வல்லன். சொற்களின் பொருள் உணர்ந்தவன். அவன் கூறுவன செம்பொருள் கண்ட சொற்களாக இருப்பது அறியத்தக்கது.

### கருணையின் மலர்ந்த கண்ணன்

தன்னைக் காண வந்த குகனைப் பார்த்து அன்று இரவு திரும்பிச் சென்று மறுநாள் காலையில் கங்கையைக் கடப்பதற்குப் படகுடன் வருமாறு கூறுகிறான் இராமன். அதுகேட்ட குகன் அந்த நிலையில் இராமனை விட்டு நீங்க மனமின்றிப் பணிவிடை செய்யவும் காவல் புரியவும் விரும்புகிறான். குகனின் உண்மை அன்பை உணர்கிறான் இராமன். குகன் தன்னை நேசிப்பது போலவே இராமனும் அவனை நேசிக்கிறான். தன்னைப் போலவே தன் அன்பு மனைவியும் அருமைத் தம்பியும் அவனை நேசிக்க வேண்டும் என்னும் குறிப்போடு அவர்களைப் பார்த்து, இவன் "நமக்குத் தீராக் காதலன்" யாதினும் இனிய நண்பன் என்கிறான்.

> சீதையை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கித் தீராக் காதலன் ஆகும் என்று கருணையின் மலர்ந்த கண்ணன் யாதினும் இனிய நண்ப இருத்தி இன்று எம்மோடு என்றான்.

தந்தையின் கட்டளையை நிறைவேற்றும் பொருட்டுக் காடு சொல்வது என் கடமை. "நீ என் உயிர் போன்றவன், என் தம்பியருள் ஒருவன்" ஆகிவிட்டாய். இந்த நாட்டின் அரசன் என்ற முறையின் உன் கட்டளையின் படி நடக்க வேண்டியது என் கடமை. உன் கடமையில் எனக்கும் பங்கு உண்டு என்கிறான்.

> என்னுயிர் அனையாய் நீ இளவல் உன் இளையான், இந்
> நன்றுதல் இவள் நின்கேள், நளிர்கடல் நிலவெல்லாம்
> உன்னுடையது. நான்உன் தொழில் உரிமையுள்ளேன்.

நமக்குள் வேற்றுமையின்றி கலந்து விட்டமையால் "நாம் செய்யும் ஒவ்வொரு செயலிலும் நம் இருவருக்கும் பங்குண்டு. நம்முள் யாருக்கு யார் பணி செய்கிறோம் என்பது இல்லை. நீ எனக்கு நன்மை செய்வதைப் போலவே நானும் உனக்கு நன்மை செய்யும் உரிமை உள்ளவன்" என்று குகன் மனங்கொள்ளுமாறு கூறுகிறான் இராமன். "நான் உன் தொழிலுரிமை உள்ளேன்" என்பது நீ செய்யும் பணிகளை நான் ஏற்றுக் கொள்வதற்கு உரியவன். அங்ஙனமே நான் செய்யும் பணிகளிலும் உனக்குப்

பங்கு உண்டு என்று இரு பொருள் தோன்றும் படியாகக் கூறுகிறான்.

மேலும் இராமன் கூறுகிறான். துன்பம் என்று ஒன்று இருப்பதால் தான் இன்பம் என்பது இருப்பதை உணரமுடிகிறது. நம் பிரிவால் ஏற்படும் துன்பம் நிலையானது அன்று. முன்பு உடன் பிறந்தவர்கள் நாங்கள் நால்வர் இருந்தோம். இப்போது அன்பால் இணைந்த உன்னோடு சேர்ந்து ஐவராகியுள்ளோம்". 'சுடருறை வடிவேலா சொன்ன சொல் கடவேன் நான் காடுறை வாழ்க்கையை முடித்து வடதிசை வரும் போது, உன்னிடம் வருவேன்' என்று கூறிக் குகனைச் சமாதானப் படுத்துகிறான்.

குகனைச் சமாதானப் படுத்துவதற்கு இராமன் கூறும் காரணத்தைக் காண்போம். 'நான் அயோத்தியைப் பிரிந்த நிலையில் அங்குள்ள மக்களைக் காப்பதற்கு உன் தம்பி பரதன் இருக்கிறான். இங்கு உள்ள உன் சுற்றத்தார் எனக்கும் சுற்றத்தார் அல்லவா? இவர்களைக் காப்பது நம் கடமையல்லவா? எனவே என் கட்டளையின் படி இங்குள்ளவர்களை நீ காப்பாயாக' என்று குகன் ஏற்றுக் கொள்ளுமாறு கூறுகிறான்.

"அங்குள கிளைகாவற்கு அமைதியின் உளன் உம்பி
இங்குள கிளைகாவற்கு ஆருளர் இசையாய் நீ
உன்கிளை என்னதன்றோ உறுதுயர் உறலாமோ?
என்கிளை இதுகா என் ஏவலின் இனிதென்றான்

நான் நீங்கிய பின்னர் அயோத்தியைக் காப்பதற்கு நம் தம்பி பரதன் அங்கு இருக்கிறான். என்னோடு நீ காட்டுக்கு வந்து விட்டால் நம் சுற்றத்தாராகிய இங்குள்ளவர்களை யார் காப்பாற்றுவது. இங்கு இராமன் குகனை உடன் பிறந்தவனாக ஏற்றுக் கொண்டு கூறுவதும் குகனின் சுற்றத்தாரைத் தன் சுற்றமாக ஏற்றுக் கொள்வதும் தன் கருத்தைக் குகன் ஏற்றுக் கொள்ளச் செய்வதும் இராமனின் ஆளுமையை விளக்குவதாகும்.

அடுத்துத் தன்னைத் தேடி வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி வலியுறுத்திக் கூறிய பரதனைச்

சமாதானப் படுத்துவதிலும் இராமனின் ஆளுமையைக் காண முடிகிறது.

"தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கி"

அவ்வலைத் தேடி அருங்கானடைந்து ஆட்சிப் பொறுப்பேற்க வேண்டுகிறான் குகன்.

அதற்கு இராமன் 'நம் தாய் கைகேயி பெற்ற வரத்தால் தந்தை தசரதன் உனக்களித்த நாடு உனக்கு உரியது. அதை நீ ஆள்வதே முறை என்று கூறுகிறான். அது கேட்ட குகன் கூறுகிறான், எனக்கு முன்னர் பிறந்தவனும் மூவுலகிலும் ஒப்பிலாதவனுமான நீ பிறந்த உலகம் எனக்குச் சொந்தமானது என்றால் இன்று அதை உனக்கு நான் தருகிறேன். நீ வந்து முடி சூட்டிக்கொள்' என்று கூறுகிறான்.

"முன்னர் வந்துதித்த உலகம் மூன்றிலும்
நின்னை ஒப்பிலா நீபிறந்த பார்
என்ன தாகின் யான்இன்று தந்தனென்
மன்ன போந்துநீ மகுடஞ் சூடெனா"

(திருவடி.சூ.ப.112)

பரதன் பகர்ந்தது கேட்ட இராமன், முன்னர் குகனிடம் கூறியது போல் கூறுகிறான். என் தந்தை ஏவியவாறு பதினான்கு ஆண்டுகள் நான் காட்டில் வாழும் வரை நீ எனக்குத் தந்த நாட்டை என் ஆணையின்படி நீ ஆள்வாயாக என்று கூறுகிறான்.

"எந்தை ஏவஆண்டு ஏழொடு ஏழெனா
வந்த காலம்நான் வனத்துள் வைகநீ
தந்த பாரகந் தன்னை மெய்மையால்
அந்த நாளெலாம் ஆள்என் ஆணையால்"

பின்னர் தேவர்கள் இராமன் காடாள பரதன் நாடாள வேண்டும் என்று கூறுகின்றனர். அவர்கள் கூறியதை பரதன் ஏற்றுக்கொள்ளவில்லை. தானும் இராமனோடு காட்டிலே வாழப் போவதாகக் கூறுகிறான்.

முன்னர் என் கட்டளையின் படி நாடாள்வது உன் கடமையென்று கூறிய போது குகன் ஏற்றுக் கொண்டான். ஆனால் பரதன் ஏற்றுக் கொள்ள மறுக்கிறான். எனவே, இராமன் பரதனின் கைகளைப் பற்றிக் கொண்டு தேவர்கள் கூறுவதை நாம் இருவரும் தள்ள முடியாது. ஆதலால் நானும் உன்னை வேண்டுகிறேன். இனியேனும் என் கட்டளைப்படி நீ திரும்பிச் சென்று நாட்டை ஆள்வாயாக என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறான்.

"வானவர் உனாத்தலும் மறுக்கற் பாலதன்று
யான்உனை இரந்தனென் இனிஎன் ஆணையால்
ஆனதோர் அமைதியின் அளித்தி பாரெனாத்
தானவன் துணைமலர்த் தடக்கை பற்றினான்"

இராமன் பேரறிவும் பேராண்மையும் படைத்த பெருந்தகையாளனாதலின் இளையவனான தம்பியிடம் கெஞ்சிக் கேட்பது இழிவு என்ற எண்ணவில்லை. தாய் தன் பிள்ளையைக் கெஞ்சி உணவுண்ணச் செய்வதைப் போல பரதனின் கைகளைப் பற்றிக் கொண்டு கெஞ்சிக் கேட்டுக் கொள்வதன் மூலம் தான் எண்ணியதை முடிக்கும் தலைமைக் குணம் அதாவது ஆளுமை நிறைந்தவன் என்பது விளங்கும்.

ஞஐ

## பரதனின் ஆளுமை

பரதன் கருநிற வண்ணன். இராமனைப் போன்ற தோற்றப் பொலிவு மிக்கவன். இலக்குவன் தம்பி சத்துருக்கனை இணைபிரியாத் துணையாகப் பெற்றவன். அவனைத் தன் தாய்ப்பாட்டன் ஆளும் கேகய நாட்டுக்கு அனுப்பிவிட்டு இராமனுக்குப் பட்டம் கட்ட முயலுகிறான் தசரதன். பரதனின் தாய் கைகேயி தசரதனிடம் பெற்ற வரத்தால் முடிசூட்டு விழா முறியடிக்கப் படுகிறது. இராமன் காடு செல்கிறான். பரதன் தன் தந்தையைக் காட்டிலும் தமையன் இராமனை மிகுதியாக நேசிப்பவன், பூசிப்பவன். முடிசூட்டு விழாவை முடிவு செய்வதற்கு முன்னர் பரதனைக் கேகய நாடு செல்லப்

பணிக்கிறான் தசரதன். பரதன் தந்தை தாயைப் பிரிய வருந்தவில்லை. தனையன் இராமனைப் பிரிய வருந்துகிறான். தசரதன் கட்டளையிட்டவுடன்

"ஏவலும் இறைஞ்சிப் போய் இராமன் சேவடிப்
புவினைச் சென்னியில் புனைந்து போயினன்
ஆவியங்கு அவனலது இல்லை ஆதலால்
ஓவலில் உயிர்பிரிந்து உடல் சென்று எனவே" (கம்ப. 1310)

மேலும் பரதன் ஒரு இடத்தில்

"எந்தையும் யாயும் எம்பிரானும் எம்முனும்
அந்தமில் பெருங்குணத்து இராமன்" – என்று

கூறுவதிலிருந்து பரதன் இராமன் மீது கொண்ட பற்றும் பாசமும் விளங்குவதாகும்.

கோசலை நாடு திரும்பிய பரதன் இராமன் காடு சென்றது அறிந்து ஆறாத் துயரடைகிறான். அவன் காடு செல்லக் காரணமானவள் தன் தாயென அறிந்து அவளைக் கொல்லவும் நினைக்கிறான்.

"மாண்டனன் எந்தை என் தம்முன் மாதவம்
பூண்டனன் நின்கொடும் புணர்ப்பினால் என்றால்
கீண்டிலன் வாய் அது கேட்டு நின்றயான்"

இராமன் காடு சென்றான் என்று சொன்ன தன் தாயின் வாயைக் கிழித்து எறிய வில்லையே என்று எண்ணுகிறான். அவ்வாறு கொன்றால் பெருமை மிகுந்த தன் அன்புத் தெய்வம் இராமன் கோபிப்பிப்பான் என்று கொல்லாது விடுகிறான். கோபத்தால் கொதிக்கிறான்.

கொடியவெம் கோபத்தால் கொதித்த கோளரி
கடியவள் தாய்யெனக் கருது கின்றிலன்
நெடியவன் முனியுமென்று அஞ்சி நின்றனன்
இடியுறும் அனைய வெம்மொழி விளம்புவான்

(பள்ளிப்படலம் 70)

தனுமயன் காடு செல்லவும் அந்தத் துயரத்தில் தந்தை இறக்கவும் காரணமான நீ இன்னமும் உயிரோடிருக்கிறாய். உன்னை உடனே காலால் எற்றித் தள்ளாமல் நானும் இருக்கிறேன். உன்னைக் கொல்லாமல் விட்டதற்குக் காரணம் நீ தாய் என்பதால் அன்று. தாயினும் மேலான என் தமையன் கோபிப்பான் என்ற ஒரே காரணத்தினால் தான் என்று கூறுகிறான்.

"நீ இனம் இருந்தனை யானும் நின்றனென்
ஏஎனும் மாத்திரத்து எற்று கிற்றிலன்
ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அல்லால்
தாயெனும் பெயர்எனைத் தடுக்கற் பாலதோ?"

(பள்ளிப்படலம் 72)

*அவளைக் கொன்றாலும் பாவமில்லை என்று நினைக்கிறான்*

மூத்தவன் இருக்க இளையவன் அரசாள்வது முறையற்றது என்று உணர்கிறான். அண்ணனை அழைத்து வந்து அரசை அவனிடம் ஒப்படைக்க முடிவு செய்கிறான். துறவுக் கோலம் பூண்டு, துயரமே வடிவாய் அண்ணனைத் தேடி அருங்கானம் அடைகிறான். கங்கையின் வடகரை அடைகிறான். அங்குக் குகன் இராமனிடம் பேரன்பு புண்டவன் என்பது அறிந்து, தான் சக்ரவர்த்தித் திருமகன் என்பதையும் பாராமல் எழுந்தோடிச் சென்று இழி குலத்தான் வேடனைக் கட்டித் தழுவிக் காலில் விழுந்து வணங்குகிறான்.

## பரதனின் தோற்றம்

மரவுரி தரித்து மாசடைந்த மெய், கலையிழந்த மதிபோன்ற நகையிழந்த முகம். கல்லும் கரைந்துருகும் படியான துயரம். இராமனைப் போன்ற தோற்றமுடையவன். இராமன் மேல் படையெடுத்து வந்திருப்பதாக எண்ணித் தாக்க நினைத்த குகன் கூறுகிறான்

வற்கலையின் உடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற் கையின்று இடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.

*பரதனின் தோற்றத்தைக் கண்ட குகன் கையில் பிடித்திருந்த வில் அவனையும் அறியாமல் நழுவி விழுகிறது. இராமன் மீது படையெடுத்து வந்ததாகக் கருதிச் சீற்றமடைந்த குகன் வருந்தும்படியாக அமைந்திருந்தது பரதனின் தோற்றம். தன் தவறை உணர்ந்து பரதன் காட்டுக்கு வந்த காரணத்தைக் கேட்கிறான்.*

*உலகு முழுவதையும் ஆண்டு முறை செய்த தன் தந்தை மூத்தவனுக்கு அரசளிக்காமல் முறை தவறி விட்டான். அவன் பிழைத்த உலக நீதியைக் காக்கும் பொருட்டு அண்ணனிடம் அரசை ஒப்படைக்க வந்ததாகக் கூறுகிறான் பரதன். தன் தயாய் கைகேயிக்குக் கொடுத்த வரத்தின் படி தந்தை கொடுத்த ஆட்சியைத் தீவினை என்று துறந்து காட்டுக்கு வந்த பரதனின் பெருமையை உணர்கிறான் குகன்.*

தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னை
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்துத் தேக்கிப்
போயினை என்ற போது புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியினம்மா

*என்று அன்பின் திருவுருவமான குகனால் பாராட்டப்படுகிறான் பரதன்.*

*சூரியன் தன் ஒளியின் சிறப்பால் மற்ற ஒளிகளை எல்லாம் விழுங்கி மறைத்துவிடுவதைப் போல் பரதனும் தன் தியாகத்தாலும் பண்பாலும் மற்ற மன்னர்களின் பெருமைகளையெல்லாம் மறைத்து விட்டவன். இது பரதனைப் பற்றிய குகனின் கணிப்பு. சுருங்கச் சொன்னால் பரதன் தியாகத்தின் திருவுருவம் கல்லும் கரைந்துருகும் கனிவான மொழி. பகையுணர்வு கொண்டு பழிவாங்க வந்த குகனையே குழைந்து உருகச் செய்யும் ஆளுமை நிறைந்தவன்.*

இராமன் காட்டில் நடந்த வழி, தங்கிய இடம், உறங்கிய இடம் போன்ற வற்றைக் குகன் கூறக் கேட்டு வருந்துகிறான். அவன் உறங்கிய இடத்தில் உறங்குகிறான். அவன் உண்டதைப் போல் தானும் காய் கனிகளை உண்கிறான். குகன் உதவியால் படையுடன் படகேறிச் செல்கிறான்.

இலக்குவன் உறக்கமின்றி இராமனுக்குக் காவல் புரிந்த செய்தியறிந்து பரதன் மனம் நெகிழ்கிறான். "இராமனோடு உடன் பிறந்தவர்களில் நான் என்றும் அவனுடைய துன்பத்துக்குக் காரணமாக இருந்தேன். இலக்குவன் அந்தத் துன்பத்தைத் துடைக்க நின்றான்" என்று இலக்குவனுடைய அன்பைப் பாராட்டுகிறான்.

"முன்பொத்த தோற்றத் தேமில் யானென்றும் முடிவிலாத
துன்பத்துக் கேதுவானேன் அவனது துடைக்க நின்றான்
அன்பத் கெல்லை யுண்டோ அழகிதென்
அடிமையென்றான்" (42, கங்கைப்படலம்)

கோசலையை இவள் யாரென்று கேட்கிறான் குகன் அவனுக்குப் பரதன் சொல்கிறான். இவள் சக்கரவர்த்தியின் மூத்த மனைவி. மூன்று உலகங்களையும் படைத்த படைப்புக் கடவுளான பிரமனைப் படைத்தவனும் திருமாலின் அவதாரமுமான இராமனைப் பெற்றதால் தான் பெறவேண்டிய பெருஞ் செல்வத்தை யான் பிறந்ததால் இழந்த பெருமைக்குரியவள் என்கிறான். இராமன் ஆட்சிபெற முடியாமல் போனதற்குத் தான் பிறந்ததே காரணமெனப் பரதன் திரும்பத் திரும்பக் கூறுவதிலிருந்து அவன் இராமனை எந்த அளவு நேசிக்கிறான் என்பது விளங்கும்.

தந்தையின் ஆணைப்படி நாடு உன்னுடையது. முடிசூட்டிக் கொண்டு ஆளாமல் தவவேடங் கொண்டு ஏன் காட்டுக்கு வந்தாய் என்று கேட்கிறான் இராமன்.

உன் தந்தை உன்னைக் காட்டுக்கு அனுப்பியதன் மூலம் பெரிய தீமை செய்து விட்டான். உலகுக்கு இது வரை நேராத பெரிய துன்பத்தை விளைவித்து என் தாய் தீமை செய்து

விட்டாள். அந்தத் தீமையைப் போக்க நீ நாட்டுக்குத் திரும்பி வந்து அரசாள வேண்டுமென்கிறான் பரதன்.

உந்தை தீமையும் உலகுறாத நோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையும்
எந்தை நீங்க மீண்டு அரசு செய் கெனாச்
சிந்தையாவதும் தெரியக் கூறினான்.

(திருவடி சூட்டுப்படலம் 108)

அது கேட்ட இராமன் அரசன் உனக்கு அளித்தது இந்த நாடு. கைகேயின் மகன் என்பதாலும் அரசு உன்னுடையது. எனவே நீதான் ஆள வேண்டும் என்கிறான்

"வரன் நில் உந்தை சொன்ன மரபினால் உடைத்
தரணி நின்ன தென்று இயைந்த தன்மையால்
உரனில் நீ பிறந்து உரிமை யாதலால்
அரசு நின்னதே ஆள்க" என்னவே.

(திருவடி சூட்டுப்படலம் 111)

'தந்தை சொல் மிக்க தோர் மந்திரமில்லை' என்பதற்கு ஏற்ப தசரதன் கையேயிக்குக் கொடுத்த வரத்தால் பரதன் ஆளுவதே முறை என்கிறான் இராமன். ஆனால் பரதன் அதை ஏற்றுக் கொள்ளவில்லை.

நீ சொல்வதைப் போல் இந்த உலகம் என்னுடையது என்றால் நான் இன்று உனக்குத் தருகிறேன். ஏற்றுக் கொள். நீ வந்து முடி சூட்டிக் கொள் என்கிறான்.

"முன்னர் வந்து உதித்து உலகம் மூன்றிலும்
நின்னை ஒப்பிலா நீ பிறந்த பார்
என்ன தாகில் யான் இன்று தந்த னென்
மன்ன போந்து நீ மகுடம் சூடெனா"

(திருவடி சூட்டுப்படலம் - 112)

பரதன் எவ்வாறேனும் ஆட்சியை இராமனிடம் ஒப்படைக்க முயல்கிறான். இராமன் எப்படியேனும் தந்தைக்கு கொடுத்த வாக்கைக் காப்பாற்ற முயல்கிறான். இவர்களின்

வாதத்திலிருந்து அன்புப் பிணைப்பால் வளர்ந்த அறவுணர்வுகளின் போட்டியை நாம் காணமுடிகிறது.

பரதன் கூறிய அதே வாதத்தின் அடிப்படையில் இராமன் பரதனிடம் பேசுகிறான். என் தந்தையின் கட்டளைப்படி நான் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழ்வேன். அதுவரை நீ எனக்குக் கொடுத்த நாட்டை ஆளும்படி உனக்குக் கட்டளையிடுகிறேன்.

"எந்தை ஏவ ஆண்டு ஏழோடு ஏழ்எனா
வந்த காலம் நான் வனத்துள் வைக நீ
தந்த பாரகம் தன்னை மெய்மையால்
அந்த நாளெலாம் ஆள்என் ஆணையால்"

(திருவடி ஆ படலம் - 116)

என்கிறான் இராமன். மேலும் சொல்கிறான். நான் தந்தை சொல்லை மறுக்காமல் காட்டுக்கு வந்தேன். அதைப்போல் நீ, என்னைத் தந்தையாகக் கருதினால், என் ஆணையை மறுக்கலாமோ? நான் சொன்னதைச் செய்வாயாக என்றான்

"அன்னது நினைத்து நீ என் ஆணையை மறுக்கலாமோ
சொன்னது செய்தி ஐய துயருழந்து அயரல் என்றான்"

முன்னர் தன் கட்டளையின் படி சிருங்கி பேர நாட்டை ஆளும்படியாகக் குகனிடம் கூறிய அதே உத்தியின் படி இங்குப் பரதனுக்கு இராமன் கூறுவது மனங்கொளத் தக்கது.

இராமன் இவ்வாறு ஆணையிட்டும் ஏற்க மறுத்த பரதன் தானும் இராமனுடன் காட்டு வாழ்க்கையை ஏற்பதாகக் கூறுகிறான். தேவர்கள் வந்து சொல்லியும் பரதனை அமைதிப்படுத்த முடியவில்லை. இராமன் ஆட்சிப்பொறுப்பேற்கும் படி அவன் கைகளைப் பற்றிக் கொண்டு இரந்து வேண்டுகிறான்.

இராமன் இவ்வாறு இரந்து கேட்டுக் கொண்டதைத் தட்ட முடியாத பரதன் ஒரு சூளுரைக்கிறான். அவ்வாறாயின், 'ஐயனே! நீ பதினான்கு ஆண்டு எல்லை கடவாமல் அயோத்தியடைந்து ஆட்சிப் பொறுப்பேற்க வில்லை எனில்

நான் தீயில் பாய்ந்து இறப்பேன் இது உண்மை. உன்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன்' என்று சூளுரைக்கிறான்.

"ஆமெனில் ஏழிரண்டு ஆண்டில் ஐயநீ
நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம்
கோமுறை புரிகிலை என்னில் கூர்எரிச்
சாம்இது சரதம் நின் ஆணை சாற்றினேன்"

(திருவடி "சூ" படலம் 133)

இவ்வாறு கூறிய பரதன் தான் அரியணையில் அமர்ந்து ஆட்சி புரிய மனமின்றி இராமனின் பாதுகைகளை (மிதியடி)ப் பெற்று அவற்றைத் தன் தலை மேல் முடியாகச் சூட்டிக் கொண்டு நாடு திரும்புகிறான்.

நல்ல இயல்பும் தீய இயல்பும் மோதிக்கொண்டால் வெற்றி தோல்விகளைப் பற்றிக் குறிப்பிடமுடியும். இங்கு அன்பும் அன்பும் மோதி வெற்றி பெற முயல்கின்றன. இறுதியில் ஒன்று கலந்து பெரியதாகி விடுகின்றன அல்லது இரண்டறக் கலக்கின்றன. பரதன் இளமை முதற்கொண்டே இராமனைத் தமையனாக மட்டுமன்று தந்தையாகவும் தெய்வமாகவும் மதிக்கிறான். இராமனும் பரதனின் பண்புகளை நன்குணர்ந்த கருணைக் கடவுள். இருவரும் அன்பு செலுத்துவதில் ஒருவரை ஒருவர் வெல்லப்பார்க்கின்றனர். இருவரும் வெல்லுகின்றனர். பரதன் அன்பு, துறவு ஆகியவற்றின் திருவுருவமாகத் திகழ்கிறான். வேண்டாமையன்ன விழுச்செல்வமே பரதனின் ஆளுமையாகும். குகன் "ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ தெரியினம்மா" என்று கூறியது போல் இராமனைக் காட்டிலும் சிறந்தவனாகி விடுகிறான் பரதன்.

## இலக்குவனின் ஆளுமை

குகன் கங்கையின் வடகரை வந்து முனிவர் தவப்பள்ளியில் தங்கியிருக்கும் இராமனைக்காண வருகிறான். இராமன், சீதை, இலக்குவன் ஆகியோர் முனிவரின் தவப் பள்ளியின் உள்ளே இருக்கின்றனர். வந்த குகன் வெளியிலிருந்து குரல் கொடுக்கிறான். இலக்குவன் குகன் வந்த காரணத்தைக் கேட்கிறான் குகன் கூறியது கேட்ட இலக்குவன் உள்ளே சென்று குகனைப் பற்றி இராமனிடம் கூறுகிறான். கூட்டமாக வந்திருக்கும் சுற்றத்தாருடன் தூய்மையான உள்ளமுடையவன் தாய்போல் நல்லவன் கங்கையாற்றில் செலுத்தும் நாவாய்களுக்குத் தலைவன் என்று கூறுகிறான்.

"நிற்றிஈண்டு என்றுபுக்கு நெடியவன் தொழுது நம்பி
கொற்றவ நின்னைக் காணக் குறுகினன் நிமிர்ந்த
கூட்டச்
சுற்றமும் தானும் உள்ளம் தூயவன் தாயின் நல்லன்
எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறைகுகன் ஒருவன்
என்றான்"

இலக்குவன் தன் தமையன் இராமனின் நலங்கருதி யாரையும் ஐயப்படுகிறவன். தன் தமையன் பரதனையே ஐயப்படுகிறவன். குகனைக் கண்டு சிறிது உரையாடிய உடனே அவனை நம்பி விடுகிறான். "உள்ளந் தூயவன், தாயின் நல்லன்" என்று இராமனிடம் கூறுகிறான். இது மனிதர்களைக் கண்டவுடன் புரிந்து கொள்ளும் இலக்குவனின் சிறந்த குணத்திற்கு ஒரு சான்றாகும்.

இரவு இராமனும் சீதையும் புல்லாலான படுக்கையில் உறங்குகிறார்கள். இலக்குவன் கண் இமைத்தல் இன்றி அவர்கள் படுத்திருந்த இடத்தைச் சுற்றிச் சுற்றி வந்து காவல் புரிகிறான். இலக்குவன் தன் மனைவி மக்களையும் பிரிந்து இராமனுக்காகவே தன்னை அற்பணித்துக் கொண்டவன். பதினான்கு ஆண்டுகள் கண்ணுறங்காமல் இருந்த மாவீரன். எடுத்த முடிவில் இம்மியளவும் மாறாதவன். வலிமை வாய்ந்த இலக்குவன் இராமனுக்குக் காவல் புரியும் இரவில் உறக்கம் என்னும் பெண் வருகிறாள். அவளைப் பார்த்துப் பதினான்கு

ஆண்டுகள் கழித்துத் தான் அயோத்திமாநகருக்குத் திரும்பியவுடன் வருமாறு கூறுகிறானாம்.

வெயில்விரி கனகக் குன்றத்து எழில்கெட விலங்கு சோதிக்
கயில்விரி வைரப் பைம் பூண் கடுந்திறல் மடங்கல்
அன்னான்
துயிலெனும் அணங்கு வந்து தோன்றலும் அவளை நாமே
எயிலுடை அயோத்தி மூதூர் எய்தும் நாள் எய்துக
என்றான்.

கம்பனின் இக்கூற்றால் இலக்குவனின் மாறாத மன உறுதி விளங்குவதாகும்.

இலக்குவன் கண்ணிமைத்தலின்றி இராமனுக்குக் காவல் நின்ற செய்தி குகன் பரதனுக்குக் கூறுவதினின்றும் விளங்குவதாகும்.

அல்லையாண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச
வில்லை ஊன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன்
கல்லையாண்டு உயர்ந்த தோளாய் கண்கள் நீர் சோரக்கங்குல்
எல்லை காண்பு அளவும் நின்றான் இமைப்பிலன் நயனம்
என்றான்.

## துன்பம் துடைக்க நின்ற துணைவன்

இலக்குவன் வில்லை ஊன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் கங்குல் எல்லை காண்பளவும் இமைப்பின்றி நின்றான் என்ற செய்தி கேட்டு இலக்குவனுடைய பண்பு நலன்களில் தலை தூக்கி நிற்கும் இயல்பு - அதாவது ஆளுமையை ஒரு வரியில் சொல்லி விடுகிறான் பரதன்.

இராமனுக்கு இளையார் என்று முன்பொத்த தோற்றத் தேமில் யான் என்றும் முடிவிலாத துன்பத்துக்கு ஏதுவானேன் அவன் அது துடைக்க நின்றான். இராமனுக்கு வரும் துன்பத்தைத் துடைத்துப் போக்குவதற்காகவே தன்னை முழுமையாக ஒப்படைத்துக் கொண்டவன் இலக்குவன்.

இலக்குவன் தனக்கு நல்ல தந்தையாகவும் பெற்ற தாயாகவும் எல்லார்க்கும் மேலான ஒப்பற்ற கடவுளாகவும் இருப்பவன் இராமன் ஒருவனே, வேறு யாருமில்லை என்று நினைத்து நடப்பவன்.

நல்லதாதையும் நீ தனிநாயகன் நீ வயிற்றில்
பெற்றாயும் நீயே பிறரில்லை பிறர்க்கு நல்கக்
கற்றாய் இது காணுதி நீயெனக் கைம் மறித்தான்
முற்றா மதியம் மிலைந்தான் முனிந்தான அன்னான்

சுருங்கச் சொன்னால் இலக்குவனின் ஆளுமையே தியாகந்தான்.

## கங்கைப் படலம் - குகப்படலம் - சமூகப் பிரதிபலிப்பு

இலக்கியம் சமூகத்தின் பிரதிபலிப்பு என்பது பொது உண்மை. ஆனால் இலக்கியங்கள் சமூக நிலையை முற்று முழுதாகப் படம் பிடித்துக் காட்டுவதாகக் கொள்ள முடியாது. ஒவ்வொரு வகையான இலக்கியமும் சமூக அமைப்பின் ஒரு சில கோணங்களை மட்டுமே சுட்டிக் காட்ட முடியும். அதிலும், கம்பனின் இராம காதை போன்ற தழுவல் நூல்களில் சமூக உணர்வுகளைக் காண்பது அவ்வளவு எளிதன்று. முயன்றால் ஆசிரியன் வாழ்ந்த காலச் சமூக அமைப்பின் குறை நிறைகளை உடன்பாட்டு முகத்தாலும் எதிர்மறை முகத்தாலும், உவமையாகவும் குறிப்பாகக் கூறுவதை அழ்ந்து சிந்தித்துப் பார்த்துப் பொருத்திக் காட்ட முடியும். எந்த அளவுக்குப் பொருத்தியுள்ளது என்பதைத் தான் காண வேண்டுமேயற்றி இது தான் முடிந்த முடிவு என்று சொல்ல முடியாது. இந்த அடிப்படையில் கம்பனின் மாபெருங் காப்பியத்தில் குகப்படலம், கங்கைப்படலம் ஆகிய இரு சிறிய பகுதிகளைக் கொண்டு கம்பனுடைய முற்று முழுதான சமூக உணர்வுகளைக் கண்டறிந்து விட முடியாது. என்றாலும் கவிஞன் ஒரு சில

இடங்களில் சிதறும் சமூகச் சிந்தனைகள் பெரிதும் நம் ஆய்வுக்குத் துணை புரிவனவாகும்.

இனி குகப்படலம், கங்கைப்படலம் ஆகிய இரு பகுதிகளாலும் அறியலாகும் சமூகப் பிரதிபலிப்பைச் சிறிது காண்போம்.

### கம்ப இராமாயண காலம்:

கம்பர் இராமகாதையை எழுதியது பிற்காலச் சோழர்காலம் என்பது அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று. அதிலும் முதற்குலோத்துங்கன் காலமா அல்லது இராண்டாங்கலோத்துங்கன் காலமா என்பதில் சிறிது கருத்து மாறுபாடு உண்டு. நமக்குக் கிடைக்கும் சான்றுகளைக் கொண்டு பார்த்தால் அனபாயன் என்னும் சிறப்புப்-பெயருடைய இரண்டாங்குலோத்துங்கன் காலமென்று சொல்லலாம்.

### குலோத்துங்கன் காலச் சமூக நிலை:

#### சாதிகள்:

கம்பன் வாழ்ந்த காலத்தில் வருணாச் சிரமம் என்னும் விஷ விருட்சம் உதிர்த்த வித்துக்கள் முளைத்து, மதமென்னும் நீர் வளத்தில், கிளைத்துத் தழைத்துச் சாதி எனும் கள்ளியும் முள்ளியும் நிறைந்த காடாகக் கிடந்தது தமிழகம். பிராமணர்கள் மிகவும் மேலானவர்களாக மதிக்கப்பட்டார்கள். அவர்களை அடுத்து அரச குடுப்பத்தவர்களும், படைமானியச் சலுகை பெற்ற நிலப் பிரபுக்களும் சிறிது வணிகர்களும் உயர்ந்தவர்-களாக இருந்தார்கள். ஏனைய பெரும் பான்மையான மக்கள் தாழ்ந்தவர்களாகவும் இழிந்தவர்களாகவும் கருதப்பட்டனர். உழுதொழில் போன்ற உடலுழைப்பில் ஈடுபட்ட உற்பத்திச் சக்திகள் அடிமைகளாக இருந்தனர்.

#### பொருளாதாரம்:

பிராமணர்கள் கோயிலின் பெயரில் நீதியையும் நிர்வாகத்தையும் கையில் எடுத்துக் கொண்டு, தேவதானம், பிரமதேயம் என்று வரியில்லாத நூற்றுக்கணக்கான வேலி நிலங்களுக்குச் சொந்தக்காரர்களாக இருந்தார்கள். நிலப் பிரபுக்கள் படை மானியங்களைப் பெற்றிருந்தனர். சிறு விவசாயிகளும் சிறு சிறு தொழில் செய்தவர்களும் விவசாயக்

கூலிகளும் பலவகையான வரிகளைச் சுமந்தனர். வரிகட்ட முடியாதவர்கள் ஆளோலை முறை மூலம் அடிமைகளாக்கப்-பட்டனர். வரிகட்ட முடியாத சிறு சிறு நிலச் சொந்தக்-காரர்களின் நிலம் பறிக்கப்பட்டது. பலர் கோயில்களுக்கும், பிராமணர்களுக்கும் நிலப் பிரபுக்களுக்கும் குறைந்த கூலியில் உழைக்குமாறு கட்டாயப் படுத்தப்பட்டனர். மிகக் கடுமையான தண்டனைகள் விதிக்கப்பட்டன. மொத்தத்தில் கோயில்களின் பெயரில் பிராமணர்களும் அரசாங்கத்தின் பெயரில் பிரபுக்களும் அதிகாரிகளும் மனிதாபிமானமின்றி மக்களைச் சுரண்டிச் சகபோக வாழ்க்கை நடத்தினர்.

தமிழ்ச் சமூகம் இருவர்க்கங்களாகப் பிரிந்தது. நேரடியான உடலுழைப்பின் மூலம் விவசாயம், நெசவு, தச்சு, கொல்லு, கட்டடக்கட்டுமானம் போன்ற உற்பத்தித் தொழில்களில் ஈடுபட்டவர்கள் இடங்கை என்றும் நேரடியாக உடலுழைப்பில் ஈடுபடாத-வர்களும் மேல்சாதிக் காரர்களின் சுரண்டலுக்குத் துணை நின்றவர்களும் வலங்கை என்றும் இரு பிரிவாகப் பிரிந்தனர். வலங்கை இடங்கை மோதல் வலுத்தது.

அரசு:

அரசர்கள் பெரிய பெரிய அரண்மனைகளில் மக்கள் எண்ணிப்பார்க்க முடியாத ஆடம்பரப் பொருள்களை வைத்துக் கொண்டு மது, மங்கை, மாமிசம் என்று மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்தனர். பொது மக்கள் தங்கள் குறைகளைச் சொல்ல வேண்டு மென்றால் மன்னர்களைக் காண முடியாது. அறிஞர்களும் கவிஞர்களும் அரசனைக் காணமுடியாது. அடிவருடிகளும் துதிபாடிகளும் அரசனைச் சூழ்ந்து கொண்டிருந்தனர். மொத்தத்தில் அரசர்கள் அதிகாரப் போதையில் மயங்கி, ஆணவமும் அகம்பாவமும் மிகுந்து, மக்களை மதிக்காத மதோன்மத்தர்களாக இருந்தார்கள். கோயில் பூசாரிகளும், படைமானியக்காரர்களும் நிலப்பிரபுக்களும் அதிகாரிகளும் மக்களைக் கொடூரமாகக் கொள்ளையடித்ததை அரசு கண்டுகொள்ளவில்லை. அடிக்கும் கொள்ளையில் பங்கு பெறுவதில் மிகக் கவனமாகவும் எச்சரிக்கையாக இருந்தனர்.

சோழர் காலம் வரலாற்றின் பொற்காலம் என்று பறை சாற்றி மயக்கமும் சிந்தனைக் கோளாறும் ஏற்படுத்தப்-பட்டுள்ளன. ஒரு புறத்தில் ஆலயங்களுக்காகவும் அங்கு ஆடும் நடன மாதர்களுக்காகவும், மடங்களுக்காகவும், வேதப் பள்ளிகளுக்காகவும், வேதியர் குடியிருப்புக்களுக்காகவும், வாரி வழங்கிய நிர்வாகம் உழைக்கும் மக்கள் மேல் வரி விதிப்பதிலும், வசூலிப்பதிலும் ஈவிரக்கமின்றி நடந்து கொண்ட முறைகள் கொடுங்கோன்மை தாண்டவமாடியதன் விளக்கங்களாகும் என்கிறார் வே. தி. செல்லம், (தமிழகம் வரலாறும் பண்பாடும், பக்-347-48)

## மக்கள் எழுச்சி

1071 ஆம் ஆண்டு முதற் குலோத்துங்கன் காலத்தில் ஒரு கலகம் நடந்தது. இடங்கையினரோடு பாதிக்கப்பட்ட சில வலங்கையினரும் சேர்ந்துகொண்டு இராச மகேந்திர சதுர் வேதி மங்கலத்தைச் சுட்டு எரித்தனர். கோயில்களும் கோயில் பண்டாரங்களும் சூறையாடப்பட்டன என்று திருவரங்கம் கல்வெட்டுச் செப்புகிறது. இவ்வகையான போராட்டங்களில் ஈடுபட்ட மக்கள் மிகக் கொடூரமாகத் தண்டிக்கப்பட்டனர் என்றாலும் போராட்டங்கள் அதிகரித்தனவே தவிர குறையவில்லை.

மூன்றாம் இராசேந்திரன் காலத்தில் 1223-ல் நடந்த ஒரு கலகத்தில் கோயில்கள் இடிக்கப்பட்டன, கோயிற் சிலைகள் பாதுகாப்பான இடங்களுக்கு அப்புறப்படுத்தப்பட்டன. கிளர்ச்சிக்காரர்களின் கோபத்தில் கணக்குப் புத்தகங்கள், நிலவுரிமைப் புத்தகங்கள் அழிக்கப்பட்டு வருவாய்த் துறையின் நடவடிக்கைகள் பெரிதும் .பாதிக்கபட்டன என்று தலைச்செங்காடு, வேள்விக்கு, உடையாளூர் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. (மா.பாலசுப்பிரமணியன், சோழர்களின் அரசியல் கலாசார வரலாறு, ப.251)

இவ்வாறு சோழர் காலத்தில் வரிக்கொடுமைகளை எதிர்த்து எழுந்த மக்கள் கிளர்ச்சி பல.

சமய நிலை

சோழர்கள் காலத்தில் மூண்ட சைவ வைணவப் போராட்டம் இரண்டாங் குலோத்துங்கன் காலத்தில் உச்ச நிலை அடைந்தது. அனபாயன் சைவர்களுக்குச் சார்பாக நின்று வைணவர்களைத் துன்புறுத்தினான். வைணவர்களைச் சைவத்துக்கு மாறும்படிக் கட்டாயப் படுத்தினான். மாறாதவர்களைக் கொடூரமாகத் தண்டித்தான். இராமானுசரையும் அவர் சீடர்களையும் சிறை பிடிக்க உத்தரவிட்டான். இராமானுசர் தப்பியோடி விடவே அவர் சீடர் கூரத்தாழ்வரைச் சிறைப்படுத்திக் கண்ணைப் பறித்தான். தில்லை கோவிந்தராசப் பெருமாளைப் பிச்சவாம் கடலில் வீசினான் என்பதற்குச் சான்றுகள் உண்டு. சுருக்கமாகச் சொன்னால் முதற்குலோத்துங்கன் காலம் சைவ வைணவ மோதல்கள் வலுத்த காலம் என்பது விளங்கும்.

அம்பிகாபதி அமராவதி:

அம்பிகாபதி என்னும் இளம் புலவன் கம்பரின் மகன் என்று ஒரு கதை வழங்குகிறது. அம்பிகாபதி என்னும் இளம்புலவன் அரசன் மகள் அமராவதியைக் காதலித்தான் என்றும் அந்தக் குற்றத்துக்காகக் கொலைத்தண்டணை வழங்கப்பட்டான் என்றும் பேசப்படுகிறது. இக்கதை உண்மையானால் குலோத்துங்கனுக்கும் கம்பனுக்கும் இடையில் இருந்த நட்புறவு முறிந்திருக்கக்கூடும். கம்பர் அவைக் களத்தை விட்டு வெளியேறியிருக்கலாம்.

மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ
உன்னை யறிந்தோ தமிழை ஓதினேன்
குரங்கேற்றுக் கொள்ளாத் கொம்புண்டோ உண்டோ?
விருந்தேற்றுக் கொள்ளாத வேந்து

என்று ஒரு தனிப் பாடல் காணப்படுகிறது. இப்பாடல் கம்பரால் பாடப்பட்டது என்றால் கம்பர் மயிலாடுதுறைக்கு அருகிலுள்ள திருவெண்ணெய் நல்லூர் சடையப்பவள்ளலின் ஆதரவில் இருந்தார் என்பதற்குச் சான்றுகள் மிகுதி. இறுதிக் காலத்தில் பாண்டி நாட்டிலுள்ள நாட்டரசங்கொட்டையில் தங்கியிருந்து இயற்கை எய்தினார் என்று பேசப்படுகிறது. இந்த

அடிப்படையிலேயே ஆண்டு தோறும் கானாக்குடியில் கம்பர் விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுவது அறியத்தக்கது.

இந்தச் செய்திகளைக் கொண்டு பார்த்தால் குலோத்துங்கன் ஒரு சைவ வெறியன் என்பதும் ஒட்டக்கூத்தர், சேக்கிழார், சயங்கொண்டார் போன்ற சைவப்புலவர்களை ஆதரித்தவன் என்பதும் கம்பரை அவன் ஆதரிக்கவில்லை என்பதும் வெளிப்படை. மேலும் அதிகாரபோதையில் மக்களை மதிக்காத கொடுங்கோலன் என்பதும் தெரிய வருகிறது. இனிக்கம்பரின் குகனை வரலாற்றுப் பிண்ணியில் காண்போம்.

குகன் அடிமை எனல்

கம்பர் தம் இராமாயணத்தில் இந்தச் செய்திகள் அப்படியே இடம் பெறுவதாகக் கொள்ள முடியாது. இந்த சமூகக் கொடுமைகளைக் கம்பர் கதையில் போகிற போக்கில் பாத்திரங்களின் வாயால் கூறுகிறார். குகப்படலத்தின் தலைமைப் பாத்திரம் குகன் இராமனைக் காண வருகிறான். வால்மிகியின் குகன் இராமனை ஒரு அரசனை மற்றொரு அரசன் வரவேற்கும் பாணில் அமைந்திருக்கிறது. இராமன் காட்டுக்கு வந்திருப்பதை அறிந்து குகன் தன்பரி வாரங்களோடும் உண்பண்டங்களோடும் இராமனை வரவேற்கச் செல்கிறான். குகன் தன்னைக் காண வருவதறிந்த இராமன் தம்பி இலக்குவனோடு எழுந்து சென்று குகனைக் கட்டித் தழுவிக் கொள்கிறான்.

ஆனால் கம்பரின் குகன் தான் ஒரு கீழ் மகன் அடிமை என்ற உணர்வோடு பழகுகிறான். நாயடியேன் என்றும் திருவடிகளில் தொண்டு செய்யவந்தேன் என்றும் கூறிக்கொள்கிறான். இராமன் குகனை உடன் பிறந்தவனாக ஏற்றுக் கொண்டமையைப் பாராட்டிப் பாடும் தொடரடிப் பொடி ஆழ்வாரும் "ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது - இரங்கி மற்றவர்க்கு இன்னருள் சுரந்து" என்று பாடும் போது பகைவன் வெறுக்கத்தக்கவன் என்று பொருள் தரும் ஏதலன் என்றும் கீழ்மகன் என்றும் கூறுவது நிலைவு கொள்ளத்தக்கது.

நாம் முன்னர் குறிப்பிட்டதைப் போல் இது சோழர் காலத்தில் மலிந்திருந்த சாதியில் கீழோர் மேலோர் என்னும்

ஏற்றத்தாழ்வு, அடிமை முறை ஆகியவற்றின் பிரதிபலிப்பு எனலாம்.

இராமனைக் காணவந்த குகன் இராமன் தங்கியிருந்த தவப்பள்ளியின் உள்ளே செல்லாமல் ஒதுங்கி நின்று கொண்டு தான் வந்திருப்பதை உணர்த்தும் வகையில் கூவுகிறான். கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான் இராமனைக் காணவருகிறான். வந்தவன் தவப் பள்ளியினுள் நேரே செல்லாமல் தொலைவில்

நின்றான் நெஞ்சில் நிரம்பும் அன்பால்
இன்றே நின்பணி செய்திட இறைவா
நன்றே வந்தனன் நாயடியேன் யான்
என்றே கூவினன் எயினரின் இறைவன்.

இன்றே உனக்குத் தொண்டு செய்ய வந்துள்ளேன் இறைவா என்று வெளியிலிருந்து குரல் கொடுக்கிறான். இராமனின் அனுமதி பெற்று உள்ளே சென்றவன் இராமனின் பாதங்களில் விழுந்து வணங்குகிறான். கை கட்டி, வாய் பொத்திக் கூனிக் குறுகி நிற்கிறான். இது எதைக் காட்டுகிறது? தாழ்த்தப்பட்டவர்களும், அடிமைகளும் தங்களின் எசமானர்களிடம் நடந்து கொண்ட முறையைக் கம்பர் படம் பிடித்துக் காட்டுகிறார் எனல் மிகையாகாது.

(உயர்சாதிக்காரர்கள் என்ற உணர்வுள்ளவர்கள் தாழ்ந்தவர்கள் தரும் உணவை உண்பதில்லை என்பது இன்றும் உண்மை.) குகன் தரும் உணவை இராமனும் உண்ணவில்லை. உண்டதற்குச்சமம் என்கிறான். வால்மீகியின் குகன் தன்னை அடிமை யென்று கூறிக் கொள்ளாதபோது குகன் கூறுவது சமூகப் பிரதிபலிப்பு எனல் மிகையாகாது.

## கம்பனின் போர்க்குணம்

இராமனைக் காணவந்த பரதன் கங்கையாற்றின் வடகரையில் தங்கியிருக்கிறான். அவன் இராமனைத் தாக்க வந்திருப்பதாக முடிவு செய்து விடுகிறான் குகன். போருக்குத் தயாராகும் படித் தன் படைக்குக் கட்டளையிடுகிறான். தாழ்ந்த சாதிக்காரர்களான அடிமைகள் ஒன்று கூடினால் அரசர்களையும் வீழ்த்த முடியும் என்று கூறுகிறான். கைகேயின்

மைந்தன் பலத்தை என் அம்பாலே - கொன்று குவித்த நிணங்கொள்பிணக்குவை கொண்டோடித்துன்று திரைக்கடல் கங்கை மடுத்திரு தூராதோ? என்கிறான். அரசன் பரதனைத் தான் வீழ்த்த முடியும் என்கிறான்.

தாழ்ந்த குடிமக்கள் முயன்றால் கொடுங்கோலரசை அழித்து நல்லாட்சி நிறுவமுடியும் என்று குகன் வாயால் கூறுகிறான் கம்பன்.

"ஆடு கொடிப்படை சாடி அறத்தவரே ஆள
வெடு கொடுத்தது பார்எனும் இப்புகழ் மேவீரோ"

என்று தன் படைவீரர்களுக்கு உற்சாக மூட்டுகிறான் குகன். வால்மீகி கூறாத இந்தச் செய்திகளை கம்பன் கூறவேண்டிய கட்டாயம் என்ன?

கம்பன் காலத்தில் சுரண்டப்பட்ட வர்க்கத்தினரான. பாட்டாளி மக்கள் இடங்கையாகப் பிரிந்து அரசர்களை ஆதரிக்கும் அக்கர காரங்களையும் கோயில்களையும் சூறையாடித்தீயிட்டுக் கொளுத்தினர். பிராமணர்களுக்கும் நிலப்பிரபுக்களுக்கும் தொண்டு செய்வதில்லை என்று தீர்மானித்துக் கிளர்ச்சி செய்தனர். அந்த காட்சிகளைக் கம்பர் பிரதிபலிப்பதாகக் கொல்வது பொருந்தாதா?

மேலும் குகன் அரசு பற்றிக் கூறும் கருத்து இந்நூல் குகனின் ஆளுமை என்னும் பகுதியில் கூறப்பட்டுள்ளது. இங்குச் சமூக வரலாற்று அடிப்படையில் சிறிது காண்போம். மண்ணாள வந்த அரசர்கள் தம் செயலால் உண்டாகும் பாவமும் அப்பாவச் செயலால் ஏற்படும் பெரும் பழியும், இவர் பகைவர், இவர் நண்பர் என்று வேறுபாடில்லாமல் யாருக்குத் தீமை செய்கிறோம் என்பதை எண்ணிப்பார்க்க மாட்டார்கள் போலும் என்று கூறுகிறான்.

பாவமும் நின்ற பெரும்பழியும் பகை நண்போடும்
ஏவமும் என்பவை மண்ணுலகு ஆள்பவர் எண்ணாரோ?

அரசு என்பது ஆண்டவனால் படைக்கப்பட்டது. அரசன் ஆண்டவனின் அவதாரம். அவன் தீமையே செய்யாதவன் என்று எண்ணியது அந்தக் காலம். செல்வம் நிறைந்த மன்னனைப் பார்ப்பது திருமாலைப் பார்ப்பது ஆகும் என்று எண்ணிய காலம். அந்தக் காலத்தில் அரசு என்பது ஒரு மக்கள் விரோதசக்தி என்று கம்பன் கூறுவது நமக்கு வியப்பளிக்கிறது.

அரசு என்பது மக்கள் விரோத சக்தி. அது ஆதிக்கவாதிகளுக்குச் சார்பாக இருந்து கொண்டு மக்களைச் சுரண்டும் ஒரு வகையான வன்முறை ஆயுதம். காவற்படையும் சட்டமும் அதன் வன்முறை ஆயுதங்கள் என்பது மார்க்சிய லெனினியக் கொள்கை. இந்தக் கொள்கை 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. ஏறக்குறைய இதே கருத்தை எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் தமிழ் மண்ணில் பிறந்த ஒரு கவிஞன் கூறுகிறான். அந்தக் காலத்தில் இப்படி ஒரு கருத்தை அவன் வெளிப்படுத்த வேண்டிய சமூக சூழ்நிலை பற்றிச் சிந்திப்பது தவறாக முடியாது. வரிகட்ட முடியாமல் தத்தளித்தவர்கள், கட்டாய சேவை செய்ய மறுத்தவர்கள், அடிமை ஓலையில் கையெழுத்திட மறுத்தவர்கள் போன்றவர்களை அரசு மிகமிகக் கொடூரமாக நடத்தியதற்குச் சான்றுகள் உண்டு. அவற்றைக் கண்டு மனம் நொந்த மேதைக் கவிஞன் கம்பன் இவ்வாறு பாடுவதாகக் கொள்ள முடிகிறது. மேலும் கம்பன் பால காண்டத்தில் அரசு பற்றிக் கூறும் செய்தியும் நாம் மேலே குறிப்பிட்ட கருத்துக்கு அரண் சேர்ப்பதாகும். அரசன் ஆளும் அற நெறியறிந்து ஏற்றுக் கொண்ட ஆட்சிப் பொறுப்புக்குத் தகாத ஆசைகளை நீக்கி, குடி மக்கள் விரும்பிக் கொடுக்கத் தக்க அளவும் முறையும் அறிந்து வரி விதித்து, தன் ஆட்சியின் மீழுள்ள மக்களுக்கு நல்லருள் செய்யும் புகழ் வாய்ந்த அரசன் பாதுகாப்பதால் சுமை குறைந்து பெருமூச்செறிந்து இளைப்பாறும் நல்ல நாட்டில் உள்ள கடற்கரையில் கப்பல்கள், நிறைந்த பாரத்தை இறக்கி முதுகு வலியை ஆற்றிக் கொள்ளும் என்கிறான்.

"முறையறிந்து அவாவை நீக்கி
முனிவுழி முனிந்து வெஃகும்
இறையறிந்து உயிர்க்கு நல்கும்
இசைகெழு வேந்தன் காக்கப்
பொறை தவிர்ந்து உயிர்க்கும் தெய்வப்
பூதல மதனின் பொன்னின்
நிறைபரம் சொரிந்து வங்கம்
நெடுமுதுகு ஆற்றுக் நெய்தல்"

*(நாட்டுப் படலம் - 54)*

*இச் செய்யுளின் பொருள் அமைதியைச் சிந்தித்துப் பார்த்தால் கம்பன் கூற வந்த செய்தி விளங்கும். அதாவது முறையறிந்து வரி வாங்கும் அரசனால் ஆளப்படும் நாடு சுமை குறைந்து பெரு மூச்சிவிடும். அந்நாட்டுக் கடற்றுறையில் மரக் கலங்கள் பாரத்தை இறக்கிவிட்டு முதுகு வலியை நீக்கிக் கொள்ளும் என்பது பாடற் பொருள். படகுகள் பாரங்குறைந்து தப்பித்தோம் பிழைத்தோம் என்று எண்ணுவதைச் சொல்வதா கம்பனின் நோக்கம்?*

*அரசன் சிந்தித்துப் பார்த்து மக்கள் தாங்கக் கூடிய அளவறிந்து வரி விதித்தால் பொன் போன்ற வரிச்சுமை குறைந்து மக்கள் மகிழ்ச்சியாக இருப்பார்கள் என்று "பூதலம்" என்பதை ஆகுபெயராகக் கொண்டால் மக்களைக் குறிக்கும் அவ்வாறின்றிப் பழைய பண்டிதர்களைப் போல் பொருள் கொண்டால் கம்பனின் இக்கவிதை எழுவாய்க்கு ஏற்ற பயனிலை இன்றாகி விடும்.*

*மக்களால் தாங்கக் கூடிய அளவுக்கே வரிவிதிக்க வேண்டும். ஆள்வோருக்கு அளவு கடந்த ஆசை இருக்கலாகாது. மக்கள் நலனுக்காக வாழ வேண்டும் என்றும் தசரதன் அவ்வாறு ஆண்டான் என்றும் குறிப்பாகக் கூறுவது மனங்-கொளத்தக்கது.*

*மேலும் கம்பன் ஒரு கனவு காண்கிறான். நாமும் அதைக் காண முயல்வோம்.*

வண்மை இல்லைஓர் வறுமை யின்மையால்
திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லைபொய் உரைஇலா மைமையால்
ஒண்மை இல்லைபல் கேள்வி ஓங்கலால்

*நாட்டில் வறுமை இல்லாததால் வாரிக் கொடுக்கும் வள்ளல் தன்மைக்கு இடமில்லை. பிறரை அழிப்பவர்கள் இல்லாமையால் வலிமை வாய்ந்தவர் யாருமில்லை. பொய் பேசுவோர் இல்லாமையால் உண்மை பேசுவோர் என்று யாரையும் சொல்ல முடியாது. எல்லோரும் கேள்வி அறிவுடையவர்களாய் இருப்பதால் அறிவாளிகள் என்று யாரையும் சொல்ல முடியாது.*

*உலக வரலாற்றில் எங்காவது இந்த நிலை இருப்பதாக யாராகிலும் சொல்ல முடியுமா? குறிப்பாகக் கம்பன் பிறந்த மண்ணில் இந்த நிலை இருந்ததா? மாறாக உடலுழைப்பில் ஈடுபட்ட பாட்டாளி மக்கள் சாதிக் கொடுமை, வரிக் கொடுமை, வெள்ளம், பஞ்சம் போன்றவற்றால் பாதிக்கப்பட்டனர். அடிமைகளாக விலை பேசி விற்கப் பட்டனர். வறுமை தாண்டவமாடியது. கொடுமையான தண்டனைக்கு ஆளாயினர். பொய்யான வருணாச்சிரம, சாதிச் சட்டத்தை மக்களின் மேல் திணித்தனர். பிராமணர்களுக்கு மட்டும் மானியங்களோடும் பல சலுகைகளோடும் கல்வி போதிக்கப்பட்டது. வரலாறு காட்டும் இந்த உண்மையை யார் மறுக்க முடியும்?*

*இந்த சமூகப் பின்னணியில் கம்பன் காட்டும் ஒரு சமூகம் மார்க்ஸ் ஏங்கல்ஸ் கூறும் சோஷலிசச் சமுதாயத்தில் கூட காணமுடியாத ஒன்று. உலகத்தில் மலர இருக்கும் கம்யூனிச ஆட்சியில் இருக்க முடியும். இது நடைமுறைக்கு ஒவ்வாதது, கனவுலகக் கற்பனை (Utopian) என்று சிலர் எண்ணக் கூடும். வாதத்துக்கு இதை வெறுங்கற்பனை என்று கொண்டாலும் அவன் வாழ்ந்த காலச் சமுதாய அமைக்கு நேர் எதிரானது அல்லவா? இது ஒரு சமூக எதிர்ப்புச் செயல் (Social Protest) இல்லையென்று சொல்ல முடியுமா?*

............... "மாநகர் வாழும் மக்கள்
கள்வார் இலாமைப் பொருள் காவலுமில்லை
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ"

திருடர்கள் இல்லாத காரணத்தால் காவல் காப்பவர்கள் இல்லை. இல்லையென்று கொள்பவர்கள் இல்லாத காரணத்தினால் கொடுப்பவர்களும் இல்லையாம். இந்த நிலை சொத்து என்று ஒன்று உண்டாகாத காலத்தில் இருந்த ஒன்று. அதைத் தவிர வரலாற்றுக் கெட்டிய காலத்தில் இருந்ததில்லை. எப்போது இருக்க முடியும்?

பொருள் முதல்வாத அடிப்படையில் வரலாற்றைப் புரிந்து கொண்ட மேதைகள் சொல்கிறார்கள். உலகமெல்லாம் தனிவுடைமை மறைந்து, சோஷயலிசம் மலர்ந்து, அதுவும் முதிர்ந்து, பொதுவுடைமை தழைத்து வளர்ந்த நிலையில் அரசு என்ற ஒன்று இல்லாமல் போய்விடும். அந்த நிலையில் Withering away of the state எல்லார்க்கும் எல்லாம் என்று இருப்பதான இன்ப நிலை மனிதகுலத்தின் பொற்காலம். கம்பன் அந்தக் கனவு காணும் அளவுக்கு ஒரு மேதை. அவன் அரசுகளின் கொடுமைகளை உணர்ந்து கண்டிப்பது வெறும் கற்பனையென்று கொள்ளமுடியவில்லை.



# நயம்

## முன்னுரை

கலை வடிவங்களில் கவிதையின் கலை நுணுக்கத்தை நயம் என்பர். கவிதையின் கலை நயம் ஒரு தனித் தன்மை வாய்ந்தது. ஓசை நயம் தருகின்ற உணர்ச்சி, குறைந்த சொற்களில் நிறைந்த பொருளைத் தரும் பாங்கு, தங்கு தடையற்ற சொல்லாட்சி, குறிப்பாக உணர்த்தும் பொருள், படிமம், உவமை, உருவகம் போன்ற உத்திகள் நிறைந்த கவிதைகள் கலை நயமிக்க கவிதைகளாகும். கருத்து, கற்பனை, உணர்ச்சி, இவற்றை உணர்த்தும் உத்தி போன்ற அடிப்படைகளில் கவிதை உரை நடையனின்றும் மாறுபட்ட கலைவடிவமாகத் திகழ்கிறது. இந்த இலக்கணங்கள் நிறைந்த கவிதைகள் கம்பன் படைப்பில் ஏராளம். சான்றாகச் சில கவிதைகளின் நயத்தைக் காண்போம்.

வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்
பொய்யொவெனு மிடையாளொடு மிளையானொடும்
போனான்

மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ
ஐயோவிவன் வடிவென்பதோ ரழியாவழ குடையான்

அவனுடைய உடம்பிலிருந்து வெளிப்படும் அழகொளியில் சூரியனுடைய ஒளியும் மங்கி மறையுமாறு மையோ, மரகதமோ மடிந்து விழும் அலைகளை உடைய கருங்கடலோ? நீர் நிறைந்த கருமேகமோ? (என்னவென்று சொல்லுவது என வியந்து) ஐயோ! இவன் வடிவமென்பது ஒரு அழியாத அழகுடையது என்று வியக்கும் படியான இராமன், உண்டோ இல்லையோ என்று எண்ணும் படியான இடையை உடைய சீதையோடு சென்றான்'என்பது பாடற் பொருள்.

கைகேயி தசர்தனிடம் பெற்ற வரத்தின் படி பரதன் நாடாளவும் இராமன் காடு செல்லவும் நேர்ந்தது. குறிப்பிட்ட தொலைவு வளர படை சூழத் தேரேறிவந்த இராமன் பின்னர் நடக்கிறான். இலக்குவனும் சீதையும் பின் தொடர வெகு தூரம் நடக்கிறான். அரண்மனையில் சுகபோக வாழ்க்கை நடத்திய அரச குமாரன் கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுப் பாதையில் நடந்து செல்கிறான். வழி நடந்த களைப்பில் வாடி விட்டதா அவன் தனம்? குலைந்ததா அவன் அழகு? இல்லை. இராமன் தன்னேரிலாத தலைவன், திருமாலின் அவதாரம். அவன் நாடு துறந்து நடைபயணமாக வந்ததால் எந்தக்கவலையோ பாதிப்போ ஏற்படவில்லை என்பதை உணர்த்துவது இக் கவிதை.

அவன் கருநிற வண்ணன். அவன் மேனியின் கருமை கதிரவனின் வெம்மையான ஒளியை மறைத்து விடுகிறதாம். வெய்யில் அவனை வருத்தமுடியாமையால் அவன் அழகு குறையவில்லை. அழியா அழகு. அவனுடன் நடந்த சீதை அழகின் திருவுருவும். அவளுக்கு இடை இருக்கிறதா இல்லையா என்று எண்ணும் படியாக இருக்கிறது.

திருமாலின் அவதாரமான கண்ணனைப் பாடிய ஆழ்வார்கள் அவனுடைய கரிய திருமேனி அழகில் மயங்கி விடுகின்றனர்.

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா அமரேறே ஆயர்தம் கொழுந்தே

என்றும் 'காரொளி வண்ணனே கண்ணனே' என்றும் அவன் கரு நிறத்தைப் பாடிப் பரவசப்படுகிறார் தொண்டரடிப் பொடியாழ்வார். 'கெண்டல் வண்ணன்' என்று பாடுகிறார் திருப்பாணாழ்வார்.

ஆழ்வார்கள் இவ்வாறெல்லாம் பாடிப் பாவசப்பட்ட இராமனை "மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ" என்று பாடி மகிழ்கிறான் கம்பன்.

(2) சுற்ற மப்புற நிற்கச் சுடுகணை
விற்று றந்துரை வீக்கிய வாளொழித்
தற்ற நீத்த மனத்தின னன்பினன்
நற்ற வப்பள்ளி வாயிலை நண்ணினான்.

சுற்றத்தார்கள் வெளியிலே ஒதுங்கி நிற்க, கொல்லும் வில்லம்பை நீக்கிவிட்டு, இடையில் கட்டிய வாளை நீக்கிவிட்டு, தூய்மையான உள்ளத்தோடு, (இராமனிடம்) கொண்ட அன்போடு (இராமன் தங்கியிருந்த முனிவர்களின்) தவப்பள்ளியை அடைந்தான் குகன்.

கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான் இராமனைக் காணவருகிறான். வந்தவன் தவப்பள்ளியினுள் நேரே செல்லாமல் தொலைவில் நின்று கொண்டு

நின்றான் நெஞ்சில் நிரம்பும் அன்பால்
இன்றே நின்பணி செய்திட இறைவா
நன்றே வந்தனன் நாயடியேன் யான்
என்றே கூவினன் எயினரின் இறைவன்

இன்றே உனக்குத் தொண்டு செய்ய வந்துள்ளேன் இறைவா என்று வெளியிலிருந்து குரல் கொடுக்கிறான்.

குகன் இராமனை முன்பின் அறிந்தவனல்லன் அவனைக் காணாமலே தொண்டு செய்ய வந்ததாகக் கூறுகிறான். வந்தவன் ஏன் உள்ளே செல்லவில்லை? அனுமதியின்றி உள்ளே செல்வது பண்புடைமை அன்று என்று

கருதுகிறானா? அல்லது உயர் வருணத்தாராகிய பிராமணர்களான முனிவர்களும் க்ஷத்திரியர்களான இராம இலக்குவரிடத்தில் தாழ்ந்த குலத்தவனான தான் செல்லுதல் முறையன்று என்று எண்ணினானா என்னும் கேள்விகளுக்குக் கம்பனிடம் விடை இல்லை.

கம்பன் இயற்றிய இராமாவதாரத்துக்கு மூலநூல் வான்மீகி இராமாயணம். வான்மீகியின் குகன் இராமனை முன்னரே அறிந்தவன், தோழன். ஒரு அரசனை அரசன் வரவேற்பதைப் போல் குகன் இராமனை வரவேற்கிறான். இருவரும் அன்போடு கட்டித் தழுவிக் கொள்கின்றனர்.

ஆனால் கம்பனின் குகன் அடிமைத் தொண்டு செய்ய வந்ததாகக் கூறுகிறான். "திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் கண்டேனே" என்று ஆழ்வார் கூறுவதற்கு ஏற்ப, கம்பன் தன் குகனைப் படைத்திருப்பானோ என்று எண்ண முடிகிறது.

முறைசெய்து காப்பாற்றும் மன்னவனை இறைவனாகக் கருதியது வள்ளுவர் காலம். அரசன் யாராக இருந்தாலும் அவனை ஆண்டவனாகக் கருதியது பக்தியிக்க காலம்.

எவ்வாறோ காட்டுக்கு வந்திருக்கும் இராமன் அரசகுமாரன், திருமாலின் அவதாரம். கம்பனும் இந்த அடிப்படையில் தான் தன் காவியத்தைப் படைக்கிறான். குகனை அன்பின் திருவுருவமாக, இராமனின் முழு அன்புக்கும் நட்புக்கும் பாத்திரமானவனாகப் படைப்பதே கம்பனின் நோக்கம். எனவே தன் பக்திக்கு இடையூறு ஏற்படுமோ என்று எண்ணி சுற்றத்தாரைத் தொலைவில் நிறுத்தி விட்டு, படைக் கருவிகளைக் களைந்து விட்டு தூய உள்ளத்தோடு இராமனைக் காண அவன் அனுமதிக்காகக் குகன் பணிவோடு காத்திருப்பதாகக் கொள்ள முடியும்

கரடுமுரடான தோற்றத்தை உடைய காட்டுவேடன் குகன் பண்பார்ந்தவனாக, நயத் தக்க நாகரிகம் மிக்கவனாக இருக்கிறான் என்னும் பொருட்சிறப்பின் நயம் பாராட்டத்தக்கது.

(3) கார்குலா நிறத்தான் கூறக் காதலா னுணர்த்து வானிப்
பார்குலாஞ் செல்வ வுன்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேனா னின்னலி னிருக்கை நோக்கித்
தீர்கிலே னான தைய செய்குவெ னடிமை யென்றான்.

மேகம் போன்ற நிறத்தை உடைய இராமன் கூற அன்பனான அந்தக் குகன் கூறுகிறான். இந்த உலகம் முழுதும் விளங்கும் செல்வனே! உன்னை இந்த நிலையில் கண்ட என் கண்களைப் பிடுங்கி எறியாத நான் கள்வனேயாவன். இந்தப் பெரிய துன்ப நிலையில் (உன்னைவிட்டு) என் இருப்பிடம் நோக்கிச் செல்லத் துணிந்திலேன். உனக்கு அடிமை செய்வேன் என்றான்.

இராமன் காட்டுக்கு வந்திருப்பதை எவ்வாறோ தெரிந்து கொண்ட குகன் இராமன் உண்பதற்குத் தேனும் மீனும் கொண்டுவருகிறான். (கம்பனுடைய) இராமன் புலால் உண்ணாதவனாகையால் "அன்போடு கொண்டு வந்த உணவுப் பொருள் தேவாமுதத்தைப் போன்றது. நாம் உண்டதற்குச் சமமாகும்" என்று கூறி குகனின் அன்பைப் பாராட்டுகிறான். மேலும் மறுநாள் தான் கங்கையைக் கடப்பதற்கு ஏற்ற படகு கொண்டுவருமாறு பணிக்கிறான்.

அது கேட்ட குகன் வருந்துகிறான். அரியணையிலமர்ந்து அதிகாரத்தோடு ஆட்சி செலுத்த வேண்டிய அரச குமாரன் ஆண்டிக் கோலத்தில் அருங்கானடைந்து ஆசிரமத்தில் அமர்ந்திருக்கும் நிலை கண்ட குகனின் மனத்தை வாட்டுகிறது. இராமனை அந்த நிலையில் காண நேர்ந்த கண்களைப் பிடுங்கி எறிய முடியவில்லையே என்று வருந்துகிறான். அந்த நிலையில் இராமனை விட்டுச் செல்ல விரும்பாத குகன் இராமனுக்கு அடிமை செய்ய வந்ததாகக் கூறுகிறான்.

வாய்ப்பு கிடைத்த போதெல்லாம் இராமனுக்குத் தொண்டு செய்ய விரும்பும் குகனின் அன்பு நிலைக்கு இக்கவிதையும் ஒரு எடுத்துக் காட்டு.

இக்கவிதை கார், பார், ஈர், தீர் என்று இரண்டாமெழுத்து ஒன்றி முற்றெதுகைத்தொடை அமைந்த விருத்தப்பாவாகும்.

(4) அன்னவ னுரைகேளா வமலனு முரைநேர்வான்
என்னுயி ரனையாய் நீ யிளவலுன் னிளையானிந்
நன்னுத லவணின்கே ணளிர்கட னிலமெல்லாம்
உன்னுடயது நானுன் றொழிலுரி மையினுள்ளேன்.

குகன் கூறியது கேட்டு, குற்றமற்ற இராமனும் மறுமொழி கூறுகிறான். என் உயிர் போன்றவனே! நீ என் தம்பி. என் இளவலான இவன் உன் தம்பி. இச் சீதை உன் தோழி. குளிர்ந்த நீர் சூழ்ந்த நிலமெல்லாம் உன்னுடையது. நீ செய்யும் தொழிலில் எனக்கும் உரிமையுள்ளது.

இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவறையும் கங்கையின் தென் கரை கொண்டு செல்கிறான் குகன். அங்கு இராமன் சித்திர கூடம் செல்லும் வழி பற்றிக் கேட்கிறான். இராமனைப் பிரிய மனமில்லாத குகன் தான் உடன் வருவதாகவும் வந்தால் என்னென்ன வகையில் உதவியாக இருக்கமுடியும் என்பதையும் விளக்குகிறான். "மல்லினும் உயர்ந்ததோளாய். மலரடி பிரியேன்" என்கிறான்.

'நீ சம்மதித்தால் என்னோடு சேனையைக் கொண்டு வருகிறேன். ஒரு பொழுதும் உன்னை விட்டுப் பிரிய மாட்டேன். உன்னக்கு யாரும் தீங்கு செய்ய விடமாட்டேன். என்னை விட ஆற்றலுள்ளவர்கள் எதிர்த்தால் முதலில் நான் மடிவேன். எனவே என்னை உடன் அழைத்துக் செல்க' என வேண்டுகிறான்.

குகன் உண்மையான அன்பன் தனக்காகத் தன் உடல், பொருள், ஆவி அனைத்தையும் துறக்கத் தயாராக இருப்பவன் என்பதை இராமன் உணர்கிறான். அன்பு வெள்ளத்தில் மூழ்கிய இராமன் குகனை என்னுயிர் போன்றவனே! நீ என் தோழன் என் தம்பி உன் தம்பி, என் மனைவி உனக்குக் கொழுந்தி என்று கூறி உறவு பாராட்டுகிறான். மேலும் சொல்கிறான் இந்த நிலம் உன்னுடையது நான் உன் தமையனானதால் இந்த நட்டின் நலத்தில் எனக்கும் பங்குளது என்கிறான் "நளிர் கடல் நிலமெல்லாம் உன்னுடையது நான் உன் தொழில் உரிமையுள்ளேன்" என்கிறான். இராமன் தன்னைத் தோழன் என்று குறிப்பிட்டது குகனுடைய ஆளுமைக்குக் கிடைத்த

மாபெரும் வெற்றி என்றாலும் அதைக் குகன் தனக்குக் கிடைத்ததற்கு அரிய பேறாகக் கருதுகிறான்.

பின்னர் தன் தமையனைத் தேடி வந்த குகனைப் பார்த்து இராமன் மேல் படையெடுத்து வந்ததாகக் கருதி விடுகிறான். "தோழமையென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ" என்று பெருமையாகச் சொல்லிக் கொள்கிறான்.

குகன் இழிகுலத்தவன் இராமன் உயர்குலத்தவன். என்றாலும் குகனைச் சகோதரன் என்று குறிப்பிட்ட கருணைத்திறத்தை ஆழ்வார்கள் பாராட்டி மகிழ்ந்து பாடுகிறார்கள்.

ஏழைஏதலன் கீழ்மகன் என்னாது இரங்கி மற்றவற்கு
இன்னருள் சுரந்து
மாழைமான் மடநோக்கி உன்தோழி உம்பிஎம்பி என்று
ஒழிந்திலை உகந்து
தோழன் நீ எனக்கு இங்கு கொழி என்ற சொற்கள் வந்து
அடியேன் மனத்து இருந்திட
ஆழி வண்ண நின் அடியிணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்து அம்மானே.

என்று திருமங்கையாழ்வார் வியந்து பாடுகிறார்.

இவ்வாறு பலராலும் பாராட்டும் படியாக இராமன் குகனிடம் கொண்ட அன்பு - உறவு குகனின் அன்புடைமைக்கு - ஆளுமைக்குக் கிடைத்த பரிசு - வெற்றி யெனலாம்.

(5) எலியெலா மிப்படை யரவம் யானென
ஒலியுலாஞ் சேனையை யுவந்து கூவினான்
வலியுலா முலகினில் வாழும் வள்ளுகிர்ப்
புலியெலா மொருவலிப் புகுந்த போலவே.

இப்படைகளெல்லாம் எலிகள். நான் (அவற்றை உண்ணும்) பாம்பு என்று மகிழ்ந்து ஆரவாரம் செய்து கொண்டு மிகுந்த வலிமை பொருந்திய கூரிய நகங்களையுடைய புலிகளெல்லாம் ஓரிடத்தில் கூடியது போல திரண்ட ஆரவாரம் மிகுந்த சேனையைக் கூவி அழைத்தான்.

இராமனைக் காண கங்கையின் வடகரை வந்த பரதன் இராமன் மேல் படையெடுத்து வந்ததாகக் கருதுகிறான் குகன். தன்படையைப் போருக்குத் தயாராகுமாறு கட்டளை இடுகிறான். வேடர்களும் மன்னர்களை வீழ்த்தமுடியும் என்பதை உணுகிறான்.

'என் துணைவனான இராமன் காடாள இவன் மட்டும் நாடாள்வதா? உயிர் மருந்தில்லை. உயிரைக் கொடுத்தேனும் இராமனைக் காப்பேன்' என்று உறுதி செய்து கொள்கிறான்.

ஆடு கொடிப்படை சாடி அறத்தவரே ஆள
வேடு கொடுத்தது பாரெனும் இப்புகழ் மேவீரோ

என்று தன் படைவீரர்களைப் பார்த்துக் கூறுகிறான். போர் கிட்டியது என்று பூரித்த தோள்களோடு பரதனின் படை எலியைப் போன்றது என்றும் தான் எலிகளை எளிதில் கொன்று தின்னும் பாம்பு போன்றவன் என்றும் கூறிக் கொள்கிறான். வலிமை வாய்ந்த தன் பெரும் படையைக் கூவி அழைக்கிறான்.

குகனெனப் பெயரிய கூற்றின் ஆற்றலான்
தொகைமுரண் சேனையைத் துகளின் நோக்கி

இப்படைகளெல்லாம் எலிகளைப் போன்றவை என்றும் தன் மூச்சிவிடுவதனாலேயே எலிகளைக் கொல்லும் பாம்பு போன்றவன் என்றும் சூளுணாக்கிறான். ஈண்டு

"ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் ரிகடும்"

என்னும் குறள் ஒப்பு நோக்கத்தக்கது. எலி, ஒலி, வலி, புலி என்று அடிகள் தோறும் முதற்சீரின் இரண்டாமெழுத்து ஒன்றிவந்து எதுகை ஓசை நயத்தை மிகு விக்கிறது. விறைந்து கொல்லும் செயலை உடைய வீரர்களுக்குப் புலி உவமையாகக் கூறப்படுகிறது. இது தொழிலுவமை என்னும் அணியாகும்.

(6) அஞ்சன வண்ணனென் னாருயிர் நாயக னளாமே
வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடி னாய்க்குக் னென்றெனை
யோதாரோ.

அஞ்சனம் போன்ற வண்ணமுடையவனும் என் அரிய உயிர் போன்ற தலைவனுமான இராமன் ஆளமுடியாதவாறு வஞ்சனையால் ஆட்சியைக் கைப்பற்றிய அரசரும் வந்தார். தீயைக்கக்கும் கூரிய அம்புகள் அவர்கள் மேல் பாயாதோ? இவர்கள் (சாகாமல்) பிழைத்துப் போய்விட்டால் என்னை நாய்க்குகன் என்று இழித்துப் பேச மாட்டார்களோ? என்பது பொருள்.

பரதன் படையெடுத்து வந்துள்ளதாகக் கருதிய குகன். அவன் மீது பகைமை பாராட்டுகிறான். படை கொண்டுதாக்கி அழிக்க முடிவு செய்கிறான். போர்ப் பறையை முழக்கவும் பாதைகளைப் பாழ்படுத்தி அடைக்கவும் கங்கையைக் கடந்து வந்தவர்களைக் கொல்லவும் ஆணையிடுகிறான்.

அரசர்களின் மார்பகங்களில் அம்பு பாயாதா? படையெடுத்து வந்த இவர்கள் உயிர்பிழைத்துப் போய் விட்டால் குகன் நாய் போன்றவன் என்று ஏசமாட்டார்களா? என்று எண்ணுகிறான். எப்படியும் பரதனைப் படையுடன் அழிப்பது என்ற முடிவுக்கு வந்து விடுகிறான்.

அஞ்சனம், வஞ்சனை, செஞ்சரம், உஞ்சிவர் என்று 'ஞ' கர மெல்லெழுத்து எதுகை அமையப் பெற்ற சிந்தையள்ளும் சந்த நயம்மிக்க கவிதை. யாப்பு வகையில் கலி நிலை துறையைச் சேர்ந்தது.

(7) ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு
சொல்லன்றோ
ஏழைமை வேட னிறந்தில னென்றெனை யேசாரோ.

இவர்கள் மிகவும் ஆழமான பெரிய அலைவீசும் ஆற்றைக் கடந்து விட முடியுமா? (நான்) இவர்களின் பெரிய யானைப் படையைக் கண்டு (அஞ்சி) விலகிவிடும் வில்வீரனா? என்னைத் தன் தோழன் என்று அந்த ராமன் சொன்னது (பொருள் பொதிந்த) சொல்லல்லவா? (நான் இவர்களை விட்டு விட்டால்) எளியவன் / அறிவிலி/ கையாலாகாதவன் இறவாமல்

இன்னமும் உயிரோடிருக்கிறானே என்று இகழமாட்டார்களா? - இது பாடற் பொருள்.

இராமன் அரசாள முடியாமல் சூழ்ச்சியினால் ஆட்சியைக் கைப்பற்றிய பரதன் இராமன் மீது படையெடுத்து வந்திருப்பதாகக் கருதுகிறான் குகன். அம்பு அரசனின் மார்பில் பாயாது என்று எண்ணிவிட்டானோ? இவர்கள் என்னிடம் அடிபட்டுச் சாகாமல் பிழைத்துப் போய் விட்டால் இராமனைக் காப்பாற்ற முடியாத கோழை, நாய் போன்ற இழிந்த பிறவி என்று தன்னை ஏளனமாகப் பேசுவார்களே என்று எண்ணுகிறான்.

அவ்வாறு அவர்கள் இராமனிடம் செல்வது கங்கையாற்றைக் கடந்து சென்றால் தானே தன்னைத் தாண்டி கங்கையாற்றைக் கடக்க முடியாது பெரிய யானைப் படையைக் கண்டு அஞ்சுபவனா நான்? இராமன் தன்னைத் தோழன் என்று சொல்லியது பொருள் பொதிந்த சொல்லல்லவா? என்று எண்ணிப் பார்த்த குகன். ஏழைமை வேடன் இறந்திலன் என்றெனை ஏசாரோ? என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்கிறான்.

கம்பன் சூழ்நிலைக்கு ஏற்பவும், பாத்திரங்களின் உண்ச்சிக் கேற்பவும் கவிதை படைப்பதில் வல்லவன். கம்பனின் படைப்பில் பொருள் பொதிந்த, சந்த நயம் மிகுந்த செந்தமிழ்க் கவிதைகள் ஏராளம். அவன் கவிதை நயத்தைச் சுவைப்பவர்கள் அடிக்கடி சொல்லி மகிழும் கவிதைகளில் இதுவும் ஒன்று.

(8) பாவமுநின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமு மென்பவை மண்ணுல காள்பவ ரெண்ணாரோ
ஆவது போகவென் னாருயிர்த் தோழமை தந்தான்மேற்
போவது சேனையு மாருயிருங்கொடு போயன்றோ

தாயின் சூழ்ச்சியால் தரணியாட்சிபெற்ற பரதன் தன் தமையன் உயிரோடிருந்தால் தனக்கு ஆபத்து நேருமென்று படையெடுத்து வந்து விட்டதாகக் கருதுகிறான் குகன்.

அஞ்சன வண்ணன் என் ஆருயிர் நாயகன் ஆளாமே
வஞ்சனை யாலரசு எய்திய மன்னரும் வந்தாரே

என்று எண்ணுகிறான். பரதனைத் தாக்கி அழிக்க முடிவு செய்கிறான். மன்னர்களின் மார்பகங்களை அம்பு துளைக்காதோ? என்று எண்ணுகிறான்.. அம்பு யார் மார்பில் பட்டாலும் துளைக்கும்.

ஆளவந்தவர்கள் பாவம், புண்ணியம், நல்லது கெட்டது, நண்பர்கள், பகைவர்கள் என்றெல்லாம் எண்ணிப் பார்க்க மாட்டார்கள் போலும். இது அரசு பற்றிய குகனின் முடிவு.

பாவமும் பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமும் என்பவை மண்ணுலகு ஆள்பவர் எண்ணாரோ!

குகன் கூறும் அரசு பற்றிய கருத்து ஆழ்ந்த சிந்தனைக் குரியது. அரசனை ஆண்டவனாகக் கருதிய காலம் பழங்காலம். அந்தக் காலத்தில் கம்பன் இவ்வாறு கூறுகிறான்.

பாரதி இந்தக் காலத்தில் கூறும் கருத்தை ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் கம்பன் கூறுவது ஆழ்ந்த சிந்தனைக்குரியது. இது கம்பனுக்கு அனபாயசோழன் எனப்படும் இரண்டாம் குலோத்துங்கனிடம் ஏற்பட்ட அனுபவத்தின் எதிரொலியாக இருக்கலாமோ என்று கருத முடிகிறது.

அந்தக் காலத்தில் அரசு என்னும் நிறுவனத்துக்கு எதிராக மக்கள் மன்றத்தில் எழுந்த குரலைக் குகன் வாயால் கம்பன் வெளியிடுவதாகக் கொள்ள முடிகிறது.

பாரதி கூறுகிறான் மன்னர்கள் மக்களும் தங்களைப் போன்ற மனிதர் என்று கருதுவதில்லை. ஆட்டுமந்தையாகக் கருதுகிறார்கள். ஒருசிலருக்குச் சார்பாக இருந்து கொண்டு, தருமத்தை அழித்து, சோரஞ் செய்து மற்றவர்களைத் துயரத்தில் ஆழ்த்தி ஊரை ஆளும் முறையே உலகத்தில் எங்கும் உள்ளது. இந்த நிலை மாறும் வரை மக்களுக்கு விமோசனமில்லை என்பது குறிப்பு.

நாட்டு மாந்தரெல்லாம் - தம் போல்
நரகர்கள் என்று கருதார்
ஆட்டு மந்தை யாமென்று - உலகை
அரசர் எண்ணி விட்டார்
ஓரஞ் செய்திடாமே - தருமத்து
உறுதி கொன்றிடாமே
சோரஞ் செய்திடாமே - பிறரைத்
துயரில் வீழ்த்தி டாமே
ஊரை ஆளும் முறைமை - உலகில்
ஓர் புறத்தும் இல்லை.

*(பாஞ்சாலி சபதம், II பகுதி - 16-17)*
*(விளக்கம் காண்க - குகப்படலமும் சமூகப் பிரதிபலிப்பும்)*

(9) அருந்துவ மென்றுணை யாள விவன்புவி
யாள்வானோ
மருந்தெனினன்றுயிர் வண்புகழ் கொண்டு
யிர்மாயேனோ
பொருந்திய கேண்மை யுகந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று கழிக்குவெ னென்கட னின்றோடே.

*என் துணைவன் (இராமன்) செய்தற்கரிய தவத்தை மேற்கொள்ள இவன் (பரதன்) இப்புவியை ஆண்டு விடமுடியுமோ? உயிர் மருந்து போன்றதோ என்றால் அன்று. எனவே வள்ளன்மைத் தன்மை நிறைந்த சிறந்த புகழைப் பெறுவதற்காக உயிர்விடுவேன். மனத்தில் நிறைந்த நட்பை விரும்பிய என் தலைவனோடு தொடர்ந்து போகாமல் இருந்ததும் நல்லதாயிற்று. என் கடமையை இன்றே செய்து முடிப்பேன் என்பது பாடற் பொருள்.*

*கங்கையின் வடகரையில் வந்திருந்த பரதன் படையெடுத்து வந்திருப்பதாக எண்ணிக் கொண்ட குகன் பரதனை எதிர்த்துத் தாக்க முடிவு செய்கிறான். வந்திருப்பவன் சக்ரவர்த்தித் திருமகன். பெரும் படையுடையவன். என்றாலும்*

அவனை எதிர்த்துப் போர் புரியத் துணிகிறான் குகன். இயல்பாகவே வெங்கரியின் ஏறு அனையான் - வீரன், தன் ஆற்றலை உணர்ந்தவன்; போரிடத் துணிகிறான். முடிந்தால் பரதனைத் தாக்கி அழிப்பது அன்றேல் போரிட்டு மடிவது என்ற முடிவுக்கு வந்து விடுகிறான்.

முன்னர் இராமனோடு காடு செல்லத்துணிந்த குகன் இப்பொழுது போகாமல் இருந்ததும் நல்லதாயிற்று என்று எண்ணுகிறான். "பொருந்திய கேண்மை உகந்தவர் தம்மொடு போகாதே - இருந்தது நன்று கழிக்குவன் என் கடன் இன்றோடு" என்கிறான்.

குகன் இராமன் மீது கொண்ட அன்பு எத்தன்மை வாய்ந்தது என்பதை விளக்குவதில் இக்கவிதையும் ஒன்று. குகனின் சீற்றத்தையும் உணர்ச்சியையும் மிக நயமாகவும் அழகாகவும் விளக்குகிறது இக்கவிதை.

(10) என்றெழுந்து தம்பி யொடு மெழுகின்ற காதலொடும்
குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக் கரை குறுகி
நின்றவனை நோக்கினான் திருமேனி நிலை யுணர்ந்தான்
துன்று கரு நறுங்குஞ்சி யெயினர்கோன் றுண்ணென்றான்.

தன் தம்பி சத்துருக்கனோடும் (குகனைக்) காண வேண்டுமென்ற விருப்பத்தோடும், ஒரு மலை எழுந்து சென்றது என்று சொல்லும் படியாக குளிர்ந்த நீரோடும் கங்கையாற்றின் கரையை அடைந்து நின்ற பரதனை நெருக்கமான கரிய தலைமயிரை உடைய வேடர் தலைவன் பார்த்தான். (வாடிய பரதனுடைய) நிலையை உணர்ந்தான்; அதிர்ச்சியடைந்தான். இது பாடற்பொருள்.

பரதன் இராமன் மேல் படை கொண்டு வந்திருப்பதாக அவசரப்பட்டு முடிவெடுத்த குகன் பரதனின் நோக்கமறிய வடகரை அடைகிறான். அவனைப் பற்றி அறிந்து வந்த சுமந்திரன்

"கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள் குலத் தனிநாதற்கு உயிர்த் துணைவன் உயர்
தோளான்"

பரதனைக் காண விரும்புவதாகக் கூறுகிறான் தேர்ப்பாகன் சுமந்திரன். அவன் கூறக் கேட்ட குற்றமிலா நல்மனத்தான் பரதன் "மன்முன்னே தழீஇக் கொண்ட மனக்கினிய துணைவனேல்" யானே சென்று அவனைக் காண்பேன் என்று தம்பியோடு எழுந்த குகனைக் காணச் செல்கிறான் பரதன்.

வந்தவன் சோர்ந்த உடம்பு, வருத்தம் தோய்ந்து களையிழந்த முகம், காவி உடை - இந்த நிலையில் பரதனைக் கண்ட குகன் துணுக்குற்றான். போர் தொடுக்க வந்தவன் இப்படியா இருப்பான்? குகன் நினைத்தது ஒன்று நடந்தது மற்றொன்று. எனவே அதிர்ச்சியடைகிறான்.

இந்த நிகழ்ச்சி வால்மீகி இராமாயணத்தில் சற்று மாறுபட்டுக் காணப்படுகிறது. பரதன் இறந்த தந்தைக்குக் கங்கையில் நீர்க்கடன் (தருப்பணம்) செய்வதற்காகக் காத்திருக்கிறான். குகன் பரதனை ஐயுறுகிறான். தன் படைகளைத் திரட்டி எச்சரிக்கை செய்து விட்டு பரதனின் நோக்கத்தை அறிய காணிக்கைப் பொருள்களோடு கங்கையின் வடகரையை அடைகிறான். அப்போது சுமந்திரன் (தேர்ப்பாகன்) குகனைப் பரதனுக்கு அறிமுகம் செய்து வைக்கிறான்.

இச்செய்யுள் அளவொத்த சொற்களால் அமைந்து எதுகை நயத்தோடு விளங்கும் பொருள் நயம் மிகுந்த கவிதை.

(11) வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.

மரவுரி தரித்தவனும், அழுக்குப்படிந்த உடம்பை உடையவனும் நல்ல ஒளியில்லாத மதிபோன்றவனும் பொலிவிழுந்த முகத்தை உடையவனும் கல்லும் கரையும்படி மிகுந்த துயரத்தை உடையவனும் ஆன பரதனைக் கண்டான்

குகன். அவன் பிடித்திருந்த வில் கையினின்றும் நழுவி விழ விம்மி, செயலற்று நின்றான். இது பாடற் பொருள்.

கங்கையின் தென் கரையிலிருந்த குகன் வடகரையில் படையுடன் வந்திருக்கும். பரதன் இராமன் மீது போர் தொடுக்க வந்திருப்பதாக முடிவு செய்து விடுகிறான், சீற்றங் கொள்கிறான். பரதனை எதிர்ப்பதற்குப் படைக்குக் கட்டளையிடுகிறான். கிட்டியது அமர் எனப் பூரித்த தோள்களுடன் பரதனின் படையைப் பார்த்து "எலியெலாம் இப்படை அரவம் நான் என ஆர்ப்பரித்துத் தன் சேனையைக் கூவி யழைக்கிறான். மண்ணுலகாள்பவர்கள் பழி, பாவங்களுக்கு அஞ்ச மாட்டார்களோ என்று எண்ணுகிறான். பரதனைப் படையோடு கொன்று கங்கையில் வீசப் போவதாகச் சூளுரைக்கிறான். பரதனின் நோக்கத்தை அறிய, தனியாக ஒடமேறி தென் கரையடைகிறான்.

குகனின் வீரம், இயல்பு, இராமனோடு அவன் கொண்டிருந்த நட்பு முதலியவற்றைச் சுமந்திரன் கூறக் கேட்ட பரதன் குகனைக் காண எழுந்தோடுகிறான். அவன் நிலையைக் கண்ட குகன் நெஞ்சம் துணுக்குறுகிறான். தான் எண்ணியதற்கு மாறாக, பரதன் மரவுரிதரித்துக் கொண்டு கண்ணீரும் கம்பலையுமாக கவலை தோய்ந்த முகத்தோடு காணப்படுகிறான். போர் தொடுக்க வந்தவன் தோற்றம் இவ்வாறு இருக்க முடியாதே என்று எண்ணுகிறான் குகன். அதிர்ச்சியடைகிறான். அவன் கையிலிருந்த வில் அவனையும் அறியாமல் நழுவி விழுகிறது. சீற்றம் மறைகிறது. சிந்தனை வளர்கிறது. இவன் இராமனைப் போலிருக்கிறான். இளையவனும் இலக்குவனைப் போலிருக்கிறான். துய்ரத்தோடு இராமன் சென்ற திசை நோக்கித் தொழுகிறான். "எம்பெருமான் பின்பிறந்தோர் இழைப்பரோ பிழைப்பு?"இராமனோடு பிறந்தவர்கள் தவறு செய்யமாட்டார்கள் என்ற முடிவுக்கு வருகிறான். இச்செய்யுள் குகனின் பண்பைப் படம் பிடித்துக் காட்டும் ஒன்று.

இப்பாடல் பொருள் பொதிந்த அளவொத்த சொற்களின் கோவையால் அமைந்த இனிய சந்த நயம் மிகுந்த செந்தமிழ்க்

கவிதை. ஒவ்வொரு அடியிலும் இரண்டாமெழுத்து (வற்கலை, நற்கலை, கற்கனி, விற்கை) ஒன்றி வந்துள்ள விருத்தப்பா விருத்தமெனும் வென்பாவிற்கு உயர் கம்பன் என்பதற்கு இதுவும் ஒரு சான்று.

(12) நம்பியுமென் னாயகனை யொக்கின்றா னயனின்றான்
தம்பியையு கொக்கின்றான் றவவேடந் தலைநின்றான்
துன்பமொரு முடிவில்லை திசை நோக்கித்
தொழுகின்றான்
எம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ
பிழைப்பென்றான்

(இந்த) நம்பியும் என் தலைவனான இராமனை ஒத்திருக்கிறான். பக்கத்திலிருப்பவனும் (சத்துருக்கன்) இராமனின் தம்பி இலக்குவனை ஒத்திருக்கிறான். அன்றியும் (பரதன்) தவவேடம் தாங்கியுள்ளான். அவனுடைய துன்பம் எல்லையற்றதாக உள்ளது. (இராமன் சென்ற) திசை நோக்கித் தொழுகின்றான். எம் தலைவனான இராமனுக்குப்பின் பிறந்தவர்கள் தவறு செய்வார்களோ? (செய்ய மாட்டார்கள்) என்பது பொருள். காட்டுக்கு வந்த இராமனைத் திரும்ப அழைத்துச் சென்று ஆட்சியை ஒப்படைக்கும் பொருட்டுப் படையுடன் வந்த பரதன் கங்கையின் வட கரையில் இருக்கிறான். அந்தக் காட்சியைக் கண்ட குகன் பரதனை ஐயப்படுகிறான். இராமன் மேல் படையெடுத்து வந்திருப்பதாகக் கருதிவிடுகிறான். பரதனை எதிர்த்துத் தாக்கி அழிக்கவும் முடிவு செய்கிறான். போருக்குத் தயாராகுமாறு படைக்குக் கட்டளை இடுகிறான். அவர்கள் தயாரான நிலையில் பரதனின் நோக்கத்தை அறியும் பொருட்டுப் படகேறி வடகரை அடைகிறான்.

அங்கு இருந்த பரதனின் கோலம் குகனை அதிர்ச்சியடையச் செய்கிறது. மரவுரி தரித்து மாசடைந்த முகத்தோடு துறவுக் கோலத்தில் கண்ணீரும் கம்பலையுமாகக் காட்சியளிக்கும் அவனா இராமனை தாக்க வந்தான்? உணர்ச்சி

வசப்பட்டு சீற்றங்கொண்ட குகன் திடுக்குற்றுச் சிந்திக்கத் தொடங்கிறான்.

படையோடு வந்த பரதன் இராமனைப் போலவும் அருகிலிருப்பவன் இலக்குவனைப் போலவும் இருக்கின்றனர். துயரமான தோற்றத்தோடு இராமன் சென்ற திசை நோக்கித் தொழுகிறான். அவனா போருக்கு வந்தவன்? இல்லை. இல்லை. இராமனுக்குப் பின்பிறந்தவர்கள் தவறு செய்யமாட்டார்கள் என்ற முடிவுக்கு வருகிறான்.

இப்பாடல் குகனின் பண்பு நிலையையும் அன்பின் ஆழத்தையும் புலப்படுத்துவதாகும்.

(13) சிருங்கி பேர மெனத்திரைக் கங்கையின்
மருங்கு தோன்று நகருறை வாழ்க்கையன்
ஒருங்கு தேனொடு மீனுப காரத்தன்
இருந்த வள்ளலைக் காணவந் தெய்தினான்

அலைகளையுடைய கங்கையாற்றின் கரையில் விளங்கும் சிருங்கிபேரம் என்னும் நகரில் வாழ்பவன், தேனும் மீனும் தேர்ந்து எடுத்துக் கொண்டு அங்கு தங்கியிருந்த இராமனைக் காணவந்தான் என்பது பாடற் பொருள்.

இராமன் காட்டுக்கு வந்திருப்பதை எப்படியோ தெரிந்து கொண்டு, காரண காரியத் தொடர்பு ஏதுமின்றி, திடீரென்று எழுந்து காதல் - பக்தியின் அடிப்படையில் அவனைக் காண வருகிறான் குகன்.

அரசன், தெய்வம், குரு என்ற இவர்களைக் காணச் செல்லும் போது வெறுங்கையோடு செல்லலாகாது என்பது தமிழர் மரபு. இந்த மரபை நன்கு உணர்ந்த குகனும் தனக்குக் கிடைத்த பொருள்களைக் கொண்டு செல்கிறான். காட்டில் கிடைக்கும் தேனும் கங்கையாற்றில் கிடைக்கும் மீனும் குகனுக்கு உயர்ந்தவை; இயல்பானவை. எனவே குகனும் தான் உயர்ந்தனவாகக் கருதிய தேனும் மீனும் கொண்டு செல்கிறான்.

முதல் நூலாசிரியர் வான்மீகியின் குகன் இராமனைக் காணச் செல்லும் போது, அப்பம், பாயாசம் போன்ற சமைத்த உணவுகளைக் கொண்டு வருகிறான். மேலும் சிறந்த கட்டி லும் குதிரைகளுக்கு உணவாகக் கொள்ளும் புல்லும் கொண்டு வருகிறான்.

வால்மீகியின் குகன் இராமனோடு பழகிய தோழன், அரசன் என்ற முறையில் சைவ உணவுகளைக் கொண்டு வந்திருக்க முடியும்.

இங்குக் குகன் கொண்டு செல்வதாகக் கம்பன் கூறும் உணவுப் பொருள் குகனின் தொழிலுக்கும் வாழ்க்கைச் சூழ்நிலைக்கும் இயைந்ததாக இருப்பது அறியத்தக்கது.

இங்குக் கங்கைவேடன் குகனின் செயல் காளத்தி வேடன் கண்ணப்பனின் செயலை ஒத்திருப்பது அறியத் தக்கது. வால்மீகியின் குகன் வால் வால் மீகியை விட பல நூறாண்டுகள் முதியவன். அதைப் போலவே செக்கிழாரின் கண்ணப்பன் சேக்கிழாரை விட பல நூறாண்டுகளுக்கு முன்னே பிறந்தவன்.

குகனும் கண்ணப்பனும் மக்களால் சொல்லிச் சொல்லிச் சுவைக்கப்பட்ட கதைமாந்தர்கள். மக்களால் பேசப்பட்ட கண்ணப்பனும் வால்மீகியின் குகனும் சேர்ந்து குகனாகக் கம்பனிடம் மறுபிறவி எடுக்கின்றான். கம்பர் குகனைப் படைத்ததைப் போல் சேக்கிழார் கண்ணப்பனைப் படைக்கிறார்.

இருவரும் வேடர்கள் இறைவனின் இயல்பு இன்னதென அறியாமலே பக்தி கொண்டவர்கள். யாதினினும் இனிய நண்பன் என்று குகனை இராமன் கூறுவது போல், கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை காண்டியால் என்று சிவபெருமான் கூறுகிறான். இருவரும் அன்பின் திருவுருவங்கள்.

பக்திப் பாவசத்தில் குகன் இராமன் உண்பதற்குத் தேனும் மீனும் கொண்டு வரும் கம்பனின் கற்பனை நயம் எண்ணி மகிழத்தக்கது.

## இராமன் குகனை அன்று தம்மோடு இருக்கச் சொல்லல்

(14) கோதைவிற் குரிசி லன்னான் கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கித் தம்பி திருமுக நோக்கித் தீராக்
காதலனாகுமென்று கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினி மினிய நண்ப விருத்தியின் றெம்மோ டென்றான்.

வெற்றி மாலை சூடிய, வில்லேந்திய, சிறந்த தலைவனான இராமன் அந்தக் குகன் கூறியது கேட்டுச் சீதையையும் தம்பி இலக்குவனையும் பார்த்து இவன் நமக்குத் தீராக் காதலன் (பக்தன்) ஆவான், என்று கூறி எல்லாப் பொருள்களைக் காட்டிலும் மேம்பட்ட நண்பனே! இவ்விடத்தில் எம்மோடு இருப்பாயாக என்றான்.

காட்டுக்குத் தம்பியொடும் சீதையொடும் வந்த இராமனைக் காணச் செல்கிறான் குகன். சென்றவன் இராமனுக்கு உணவாகத் தேனும் மீனும் கொண்டு செல்கிறான். இராமனுக்கு அடிமையாக இருந்து தொண்டு செய்ய வந்ததாகக் கூறுகிறான். குகனின் அன்பை உணர்ந்த இராமன் கங்கையைக் கடப்பதற்குக் குகன் உதவுவான் என்று நம்புகிறான். மறுநாள் காலையில் தோணி கொண்டுவருமாறு கேட்கிறான்.

அரசனாக ஆட்சிசெய்ய வேண்டியவன் காவியுடை தரித்துக் கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுக்கு வந்து கடுந்துயருழந்த நிலையில் அவனை விட்டுப் பிரிய மனமின்றி உடனிருந்து அடிமைத் தொண்டு செய்ய ஆசைப்படுகிறான். பிரிய மனமின்றி நிற்கிறான்.

அவன் அன்பு நிலையை உணர்ந்த கருணையின் மலர்ந்த கண்ணன் இராமன் சீதையையும் தன் தம்பி இலக்குவனையும் ஏதோ குறிப்போடு நோக்கி இவன் நமக்குத் தீராக் காதலனாவான் என்று கூறி அருகில் அமரச் சொல்கிறான்.

இராமன் தலைவன். அவன் குகனைப் பக்தனாக ஏற்றுக் கொள்வதை யாரும் தடுக்க முடியாது. அப்படியிருக்க ஏன் அவன் சீதை இல்குவனை நோக்க வேண்டும்?

நோக்கத்தில் இருவகை உண்டு. ஒன்று மனத்தில் வேறு ஒருபொருளை எண்ணிக்கொண்டு வெறுமெனப் பார்ப்பது. மற்றையது பார்க்கப்படும் பொருளை ஒரு குறிப்போடு ஊடுருவிப் பார்ப்பது. இந்தப் பார்வையை - நோக்கல் நோக்கம், நோக்கிய நோக்கம் என இரு வகையாகப் பிரிப்பார் தொல் காப்பியர். இங்கு இராமன் சீதையையும் இலக்குவனையும் நோக்கியது நோக்கிய நோக்கம். அதாவது குகன் உண்மையான அன்பு படைத்தவன். நிலையான பக்தன் என்பதை அவர்களும் உணர்ந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் சீதையை நோக்கித் தம்பித்திருமுகம் நோக்கித் தீராக் காதலனாகும் என்று கருணையின் மலர்ந்த கண்ணன் யாதினும் இனிய நண்ப இருத்தி ஈண்டு எம்மோடு என்றான்."

# எங்கள் வெளியீடுகள்

# ஐ ஏ எஸ்

## இறுதி (MAIN) தேர்வு
## விருப்பப் பாடம்

### தாள் ஒன்று

1. தமிழ் மொழியும் இலக்கியமும்
   (Tamil Language & Literature)

2. திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்.

### தாள் இரண்டு

3. வஞ்சிக் காண்டம் - ஒரு சமூக வரலாற்றுப் பார்வை

4. தடுதாட்கொண்ட புராணம் ,,

5. பாஞ்சாலி சபதம் ,,

6. குகப் படலம் ,,

7. குடும்ப விளக்கு ,,

8. அகல் விளக்கு ,,

9. திருக்குறள் - காமத்துப் பால் அச்சில்